# அரன் தமிழ் வாசகம்

## ஐந்தாம் வகுப்பு



'வித்துவான்'
ஐ. நடேசபிள்ளை
உத்தரமேரூர்.






வெளியிடுவோர் :
...ங்கடேசன் கம்பெனியார்,
...தக வியாபாரம்,
சென்னை.
1934 [விலை அணா 6.

# முன்னுரை

தமிழ் மாணவர்கட்கென, இக்காலத்தில் வெளிவந்துல வும் வாசக புத்தகங்கள் பல. கால நிலைக்கேற்ப அறிஞர் உளத்திற்றோன்றும் கருத்துக்கள் பலவற்றின் பயனாக ஒவ்வொன்றும் வெளிவந்ததாகும். ஆகவே, அனைத்தும் இன்றியமையாதனவே.

நான் ஆரம்ப பாடசாலை ஆசிரியனாக இருந்த காலத்தில் என் மனதிற்பட்ட சில எண்ணங்களின் பயனாக இந்த 'அரன் தமிழ் வாசக' வரிசைகள் வெளிவரலாயின. இதை யொட்டி உயர்தர வகுப்புகளுக்குரிய வாசகங்களும் வரைய வேண்டும் என்னும் அவா உடையேன்.

இப்புத்தக வரிசையில், சிறுவர்கள் வழங்கும் பல பதங்களின் இடையே முக்கியமான அரும்பதங்கள் புகுந் திருக்கின்றன. ஒருபொருட் பன்மொழிகள் வேண்டிய விடங்களில் விரவியுள்ளன. அன்றியும், பிள்ளைகட்கு உற்சாகத்தையும், பயனையும் தரக்கூடிய பாடங்களே தொகுக் கப்பட்டுள்ளன. வாசகத்திலும், செய்யுளிலும் உள்ள அரும்பதங்கட்கு உரையை அகராதியாக வரைந்துளேன். பிள்ளைகள் இது முதலாகவே அகராதி பார்க்கும் முறையைச் செவ்வனே அறிவார்கள் என்றே அவ்விதம் எழுதப்பட்டது.

இவ்வாசகங்களைக் கற்கும் மாணவர்கள் தமிழ் இலக்கிய இலக்கணங்களை மிகுதியாகக் கற்க ஆவல் கொள்வார்கள் என்பதும், எளிதிற் கற்பார்கள் என்பதும் என்றுணிபு. இப்புத்தகங்களை கண்ணுறுவார்க்கும் அது புலனாகும்.

சிறுவர்கட்குப் பெரிதும் பயன்றருமாறு எழுதப்பட்ட இப்புத்தகங்களைப் பாடசாலைத் தலைவர்களும், பரீக்ஷாதிகாரிகளும், ஆசிரியர்களும் தங்கள் பாடசாலைகளில் பாடமாக வைத்துப் பின்னும் என்னை ஊக்குவார்களாயின், அவர்கட்கியான் பெரிதும் கடமைப்பட்டவனாவேன்.

என்னை இத்துறையிற் புகுத்திய இறைவனடிகளை என்றும் இறைஞ்சுகின்றேன்.

இங்ஙனம் :

உத்தரமேரூர்,
1-1-1933.

தமிழபிமானி,
**ஐ. நடேசன்.**












## உள்ளடக்கம்

பக்கம்.

## கடவுள் துதி

சித்திதரும் புத்திதரும் செந்திருவைச் சேர்விக்கும்
பத்திதரும் மெய்ஞ்ஞானம் பாலிக்கும்—கோத்தி
அரிமுகனைக் காய்ந்த அருணேசர் தந்த
கரிமுகனைக் கைதொழுதக் கால்

—*அருணகிரி அந்தாதி.*

படிக நிறமும் பவளச்செவ் வாயும்
கடிகமழ்பூந் தாமரைபோல் கையும்—துடியிடையும்
அல்லும் பகலும் அனவரதமும் துதித்தால்
கல்லும்சொல் லாதோ கவி.

—*சரஸ்வதி அந்தாதி,*

அரும்பொனே மணியேஎன் அன்பேஎன் அன்பான
அறிவேஎன் அறிவில் ஊறும்
ஆனந்த வெள்ளமே என்றுஎன்று பாடினேன்
ஆடினேன் ஆடி நாடி
விரும்பியே கூவினேன் உலறினேன் அலறினேன்
மெய்சிலிர்த்து இருகை கூப்பி
விண் மாரி என என்இரு கண் மாரி பெய்யவே
வேசற்று அயர்ந்தேன் இயான்
இரும்பு நேர் நெஞ்சு அகக் கள்வன் ஆனாலும் உனை
இடைவிட்டு நின்றது உண்டோ
என்றுநீ அன்று நான் உன் அடிமை அல்லவோ
யாதேனும் அறியா வெறும்
துரும்பனேன் என்னினும் கைவிடுதல் நீதியோ
தொண்டரோடு கூட்டு கண்டாய்
சுத்தநிர்க் குணமான பரதெய்வமே பரஞ்
சோதியே சுகவாரியே.

—*தாயுமானவர் பாடல்.*



# 1. அப்பர்

பிள்ளைகளே! முன் வகுப்பில் சைவசமய குரவர்கள் நால்வர் இருந்தனர் என்று வாசித்தோம். அவர்களுள் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் சரித்திரத்தை உணர்ந்தோம். அவர்காலத்தில் இருந்த திருநாவுக்கரசர் வரலாற்றை இங்கே கூறுவோம்.

முனைப்பாடி என்னும் நாட்டைச் சேர்ந்த 'ஆமூர்' என்னும் நகரத்தில் புகழனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் வேளாளர் குலத்தைச் சேர்ந்தவர். புகழனாருடைய மனைவிபெயர் மாதினியார். இவர்களுக்கு இருமகவு உண்டு. அவற்றுள் ஓர் மகவுபெண். அதன்பெயர் திலகவதி. மற்றொன்று ஆண் குழந்தை. அதன் பெயர் மருள் நீக்கி. புகழனார் அவ்விருவர்க்கும் இளமையிலேயே கல்வி கற்பித்தார். திலகவதிக்குப் பன்னிரண்டு வயது ஆயிற்று. அரசன் இடத்தில் சேனாபதியாய் இருந்த கலிப்பகை என்பவருக்குக் கொடுத்து மணம் முடிக்க நிச்சயம் செய்தனர். மணவினைக்கு முன்னரே கலிப்பகை போருக்குப் போகவேண்டி நேர்ந்தது. அதன் பொருட்டு அவர் வடதேசம் சென்றார். அப்போது புகழனாரும், அவர்மனைவியும் இறந்தனர். திலகவதியும் மருள் நீக்கியும் பந்துக்கள் வீட்டில் இருந்தார்கள்.

யுத்தஞ் செய்ய வடநாடு சென்ற கலிப்பகையாரும் வீர சுவர்க்கம் அடைந்தார். அதை அறிந்த

திலகவதிக்கு ஆற்ற ஒண்ணுத் துயர் ஏற்பட்டது. அதனுல், உயிர் விடவேண்டும் என்னும் எண்ண மும் உண்டாயிற்று. எனினும், தம்பிக்கு ஆதரவு வேண்டுமே என்னும் கருத்தினுல் அவ்விதம் செய்ய வில்லை. மருள் நீக்கி, தன்கையில் இருந்த பொரு ளைக்கொண்டு அறச்சாலை, தண்ணீர்ப் பந்தர், சோலை, தடாகம் முதலிய தருமங்களை நியமித்தார். இல்லறத்தில் இருக்க விரும்பாமல் துறவறம் சென் ருர். அக்காலத்தில் ஆருகதம் என்னும் சமண மதம் சற்றுத்தழைத்திருந்தது. ஆதலால், மருள் நீக்கியும் அம்மதத்திற் சேர்ந்து விட்டனர். சமண சமய சாஸ்திரங்களில் வல்லவரானுர்.

அம்மதத்தினர், அவரைத் தங்களுக்கு ஆசாரிய ராக அமர்த்திக் கொண்டார்கள். அப்பொழுது மருள் நீக்கி என்னும் பெயர் நீங்கிவிட்டது. ' தரும சேனர் ' என நாமம் வழங்கலாயிற்று.

அதுமுதல் திலகவதிக்கு ஆமூரில் வசிக்க விருப்பம் இல்லை. வீரட்டானம் என்னும் நகரத்தில் உள்ள சிவ க்ஷேத்திரத்தை அடைந்து திருப்பணி புரியும் ஆவலே மிகுந்திருந்தது. அவ்விதமே வீரட் டானம் சென்று விமலன் பணி புரிந்திருந்த திலக வதிக்கு ஒரு கவலை மாத்திரம் நீங்கவே இல்லை. அக்கவலை தன் தம்பியைப் பற்றியதாய் இருந்தது. ஆதலால், அவ்வம்மையார் " கடவுளே ! என் தம்பி சமணமதத்தை விட்டுச் சைவமதத்தைத் தழுவுமாறு அருள் புரிய வேண்டும் " என்று, இடைவிடாது

பிரார்த்திப்பது வழக்கம். அப்பிரார்த்தனைக்கு வீரட்டான ஈச்சுரரும் அருள்புரிந்தார். அதன் பயனாகத் தருமசேனருக்கு வயிற்றில் சூலை நோய்கண்டது. அப்பிணியினால், அவர் பட்ட துன்பத்திற்கு அளவே இல்லை. சமண மந்திரவாதிகளும், வைத்தியர்களும் பல பரிகாரம் செய்தார்கள். யாதுசெய்தும் பிணி அகலவில்லை. அதைக்கண்ட தருமசேனர் தமக்கை இடத்திற்கு வந்தார். தமக்கையின் கட்டளையின் படி சிவபெருமானைப் பாடித் திருநீறு அணிந்தார். உடனே சூலை தவிர்ந்தது. "நீ என்னை இனிமையாகப் பாடியதனால் உனக்கு 'நாவுக்கு அரசு' என்னும் பெயர் எங்கும் வழங்கட்டும் " எனச் சிவபெருமான் அருள்வாக்கு ஆகாயத்தில் ஒலித்தது.

அதை அறிந்த சமணர், பல்லவ அரசனிடம் சென்று துர்ப்போதனை புரிந்தார்கள். அம் மன்னனும் அவற்றைச் செவியில் ஏற்று, நாவுக்கரசரை அழைத்துவருமாறு கட்டளை இட்டான். தூதுவர் சென்று மருள் நீக்கியாரை அண்மி அரசன் உத்தரவை அறிவித்தனர். அவரும் அஞ்சாது சென்றார். அரயன், அமணர் சொற்படி நாவுக்கரசரை நீற்று அறையில் இருக்கச் செய்தான். நஞ்சு குடிப்பித்தான். குஞ்சரத்தை ஏவிக் கொல்லச் செய்தான். எதனாலும் மருள் நீக்கியாருக்கு மனக்கவலை உண்டாகவில்லை. முடிவில் அவரைக் கல்லோடு சேர்த்துக் கட்டிக் கடலில் தள்ளினார்கள். நரலையில் தள்ளப்பட்ட நாவுக்கரசர்



“ சொல் துணை வேதியன் சோதிவானவன்
பொன் துணை திருந்துஅடி பொருந்தக்கைதொழ
கல் துணைப் பூட்டி ஓர் கடலில் பாய்ச்சினும்
நல் துணை ஆவது நமச்சி வாயவே ”

என்னும் பதிகத்தைப் பாடிப் பயப்படாது இருந்தார். கல் தெப்பம்போல் மிதந்தது. அலைகள், அக்கல்லைக் கொணர்ந்து கரையிற் சேர்த்தன. நாவுக்கரசர், திருப்பாதிரிப்புலியூர்க்கு அருகில் கரை ஏறினர்.

பின்னர் நாவுக்கரசர், பல புண்ணிய தலங்களுக்கும் சென்று சிவபெருமானைத் தரிசித்தார். அப்பொழுது திருஞான சம்பந்தப் பிள்ளையாரைப் பற்றிக் கேள்விப்பட்டார். அவரைத் தரிசிக்க ஆவல் கொண்டு சீகாழிக்குச் சென்றார். நாவுக்கரசரைக் கண்ட உடனே சம்பந்தர், "அப்பரே" என்று அன்புடன் தழுவிக்கொண்டார். அப்பரின் சிறப்பு நோக்கி, அவருக்கு ஏற்பட்ட பெயர்க்கு முன்னே திரு என்னும் அடை மொழியைச் சேர்த்து திருநாவுக்கரசர் என்று எவரும் கூறலாயினர். அவ்வாறே அவர் பிறந்த நாட்டையும், ஊரையும் சிறப்பித்துத் திருமுனைப்பாடி நாடு, திருஆமூர் என்பது வழக்கம். அப்பர் ஒரு முறை திங்களூருக்குச் சென்றார். அப்போது அவ்வூரில் வசித்திருந்த அப்பூதி அடிகள் என்னும் பக்தருடைய புதல்வன் ஒருவன் இறந்துவிட்டான். அதை அறிந்த வாகீசர் சிவபெருமான் மீது திருப்பதிகம்பாடி அப்பிள்ளை பிழைக்குமாறு செய்தார். சம்பந்தருடன் வேதாரண்யம் சென்றிருந்தபோது, அவ்வாலயத்தில் நெடுநாளாக அடைபட்டுத் திறக்கமுடியாதிருந்த கதவு திறக்குமாறு பாடினர். அப்பர் செய்த அருஞ் செயல்களால் சைவமதம் நிலைத்து ஓங்கியது.

அப்பர் சுவாமிகள், சித்திரை மாதம் சதய நக்ஷத்திரத்தில் சிவபெருமான் திருவடியைச் சேர்ந்தார். அப்பொழுது அவருக்கு வயது எண்பத்தொன்று. சைவர்கள் அனைவரும் ஆண்டுதோறும் அத்தினத்தில் அவருக்குப் பூசனை புரியவேண்டியது அவசியம்.



## 2. தேன்

'தேன்' என்றால் யார்க்கும் நாவில் நீர் ஊறும். அது இனிப்பாகிய திரவப்பொருள். சில மருந்துகளைத் தேனில் குழைத்துச் சாப்பிடுவது வழக்கம். அப்படிக் கலப்பதனால், மருந்தில் உள்ள வெறுப்பான ருசி சற்று மாறுகிறது. தேனுக்கே சில நோய்களை நீக்கும் குணம் உண்டு. தேனின் இனிமையைக் கருதியே நயமான சொல்லைத் தேன்மொழி என்று கூறுகிறோம். தேன்மொழி என்றால் தேன்போன்ற மொழி என்று பொருள். அதை இன்னும் விவரமாகச் சொல்லும்போது தேனைப்போன்ற இனிமையான சொல் என்றாகும்.

தேனில் ஒரு வகையான பசை கலந்திருக்கின்றது. தேன், கருமை கலந்த செம்மை நிறமாய் இருக்கும். வெண்மை, சிறிது மஞ்சள், பழுப்பு, சிவப்பு, சிறிது பசுமை ஆகிய நிறங்களும் தேனுக்கு உண்டு. எந்தப் பூவில் உண்டாகிறதோ அப்பூவின் தன்மைக்குத் தக்கவாறு தேனுக்கு ஏதாவது ஒரு நிறம் அமையும். அவ்விதமே வாசனையும் உண்டு. மலர்களின்

பண்புக்குத் தகுதியாகவே தேனுக்கு ருசியும் ஏற்பட்டுளது. இனி, தேன் நமக்கு எப்படிக் கிடைக்கின்றது என்பதைக் கவனிப்போம்.

தேனீக்கள், தமது ஆகாரத்திற்கென்று புஷ்பங்களில் இருந்து தேனைக்கொண்டு வந்து கூட்டில் சேர்த்து வைக்கின்றன. ஈ, புஷ்பத்தில் இருந்து எடுக்கும்போது இனிப்பாக உள்ள நீர், அந்த ஈயின் வயிற்றில் இருக்கும் தேன் பைக்குப் போய்ச் சேர்கிறது. அவ்விடத்தில் அது சிறிது மாறுபாடு அடைந்துவிடுகிறது. பிறகு ஈ அதைக் கக்கிக் கூட்டில் வைக்கின்றது. கூட்டில் கொணர்ந்து வைக்கும் தேன் அதிக ஜல ரூபமாக இருந்தால் கீழே வழிந்து விடும் அல்லவா? அதற்காக, ஈக்கள் தம்முடைய இறக்கைகளால் விசிறி இறுகச் செய்கின்றன. இப்படிச் சேர்ந்த தேனை எல்லாம் கூட்டில் உள்ள அறைகளில் நிறப்பி மெழுக்கினல் மூடிவிடுகின்றன. ஏன்?

மாரி நாளைக்கு வேண்டுவ மற்று எலாம்
சீரிது ஆகிய வேனிலில் தேடியே
மாரி நாளில் சுகத்தோடும் வைகுக
ஒரும் உள்ளத்து உணர்வு உடையோர்கள்தாம்

என்னும் பெரியோர் வாக்கை மதித்தே அவ்விதம் செய்கின்றன என்று சொல்லலாம். சிறிய ஈக்கள் இவ்வளவு கஷ்டப்பட்டு முயற்சியோடு சேர்த்து வைத்த பிற்கால உணவை மக்கள் கவர்ந்துகொள்கின்றனர்.

ஆகையினாலேயே, மனிதர் கண்ணுக்குத் தெரியாத இடத்திலும், தெரிந்தாலும் சென்று அழிக்க முடியாத இடத்திலும் தேனீக்கள் கூட்டைக் கட்டுகின்றன. அப்படிப்பட்ட இடங்கள் எவை? மலைச்சிகரம், மலைக்குகை, பெரிய மரத்தின் உச்சிக் கிளை முதலியவைகளே. எப்படிப்பட்ட இடமாயினும் மனிதர்கள் தேன் கூட்டைக்கண்டால் அழிக்காமல் விடமாட்டார்கள். மலை நாட்டிலும், காடுகளிலும் வசிக்கும் குறவர்கள் தேனைச்சேகரித்து விற்று ஜீவிக்கின்றனர். தேன் கூட்டிற்கு, இறால் என்று பெயர். தேனுக்கு மது, பிரசம், முருகு, பிழி, நறவு, நறவம், வேரி, தேம், தேறல் எனப் பல பெயர்கள் உண்டு.



## 3. திரௌபதி மணம்

பாண்டவர், வேத்திரகீயத்தில் வசித்திருந்தார்கள் என்று முன் வகுப்பில் படித்தோம் அன்றோ! அவர்கள் அங்கு இருப்பது கௌரவர்களுக்குத் தெரியாது. அரக்கு மாளிகையில் ஐவரும், ஆயும் அழிந்தனர் என்றே நினைத்து விட்டார்கள். அச் செய்தி, பாஞ்சால நாட்டரசன் துருபதனுக்கும் எட்டியது. அவன் மிகவும் வருந்தினான். பாஞ்சாலன், தன் மகளை அருச்சுனனுக்கு மணம் செய்து கொடுக்க நினைத்திருந்தான். அவ்வெண்ணம் வீணாயிற்றே என ஏங்கினான். என்னசெய்வதென்று அவனுடைய மனதுக்குப் புலப்படவில்லை. ஜோஸியர்

அனைவரும் 'திரௌபதி அருச்சுனனுக்கே வாழ்க்கைப் படுவாள்' என்றே கூறுகின்றனர். ஆதலின் தன் புத்திரிக்குச் சுயம் வரம் என்று எல்லா மன்னர்களுக்கும் ஓலை போக்கினன். அச்செய்தியைப் பாண்டவரும் கேள்வியுற்றனர்.

அவனிபர் பலரும் அந்நகரத்தை அடைந்தனர். பாண்டவர்களும் பிருதையும் பல பனவர்களோடும் புறப்பட்டு வந்தார்கள். அவர்கள் வரும் வழியில் வியாச முனிவர் எதிர்ப்பட்டார். அவரைக் கண்டதும் அனைவரும் அடிகளில் பணிந்து, அஞ்சலி செய்து நின்றார்கள். முனிவர் பஞ்சவரைப் பார்த்து, "நீங்கள் அந்தணர் உருவத்துடன் சென்று பாஞ்சாலியை மணந்து, அதன் பின்னர் உண்மை உருவினைக் காட்டுதல் வேண்டும்" எனக்கூறி, நன்கு ஆசீர்வதித்து அனுப்பினர். அவர்கள் அன்று இரவு முழுவதும் நடந்து கங்கைக் கரையை அடைந்தார்கள். அங்கே சித்திராங்கதன் என்னும் கந்தருவன், போர் செய்ய எதிர்த்து வந்தான்- அருச்சுனன் ஒரு ஏவினால் கந்தருவனுடைய தேரைக் கொளுத்தினன். அதனால் அவமானப்பட்ட விஞ்சையர் வேந்தன் விரைந்தோடினன். தருமன் முதலியோர் கங்கையைக் கடந்து, அங்கிருந்து தௌமிய முனிவர் என்னும் பெரியோரை இறைஞ்சி, ஆசிபெற்றுச்சென்றனர்.

சென்றவர்கள், பாஞ்சால நகரத்தை நணுகினர். பொழுதும் புலர்ந்தது. மங்கல வாத்தியம், சங்கநாதம் முதலிய நன்னிமித்தங்களே நிகழ்ந்தன.

அதனால், மகிழ்ந்து போந்து ஒரு வீதியில் இருந்த குலாலன் வீட்டை அடைந்தார்கள். அங்கே குந்தியை இருத்தி விப்பிரருடன் சென்று மணப்பந்தரைக் கிட்டினர். ஒரு புறத்தில் அந்தணருடன் அமர்ந்தார்கள். பாங்கியர், பாஞ்சாலியைப் பலவித பணி பட்டாடை முதலியவற்றால் பாங்கு படுத்திப் பைய அழைத்து வந்தனர். பதுமைபோலும் மெல்லென அசைந்து அசைந்து நடந்து வந்த அக்காரிகை, தன் தந்தையின் அருகில் அமர்ந்தாள்.

அப்பொழுது, பாஞ்சாலன் மகன் திட்டத்துய்மன் எழுந்து சபையில் இருந்த தரணிபரை நோக்கி, " இதோ இருக்கின்ற வில்லைப் பாருங்கள். இதை வளைத்து இதில் ஒரு அம்பு தொடுக்க வேண்டும். அந்த அம்பை மேலே சுழலுகின்ற சக்கரத்தின் மத்தியில் குறியை வைத்து எய்யவேண்டும். கூறியபடி குறி பிசகாமல் அடித்தவர்களுக்கே திரௌபதி உரியள்" என்றான். செவிலியர் பாஞ்சாலிக்கு அரசருடைய குலம் முதலியவற்றை அறிவிக்கத் தொடங்கினர். வரிசையாக துரியோதனன், துர்ச்சாதனன் முதலிய தம்பியர், சகுனி, அசுவத்தாமன், கன்னன், பலராமன், கண்ணன், சாத்தகி, சிசுபாலன், சராசந்தன், பகதத்தன், சல்லியன், நீலன், பாண்டியன், சோழன், சேரன் என்பாரைப்பற்றி எல்லாம் கூறினர்கள்.

வில்லைக்கண்ட சிலர், பேசாது எழுந்து ஏகினர். சிலர்நெருங்கவும் அஞ்சிமீண்டனர். பலர் சென்று

பலம் கெட்டு வருந்தினர்கள். முயன்று முடியா தென்று அறிந்து முகம் குனிந்து அமர்ந்தவர்கள் பல



பேர். இவற்றை எல்லாம் பார்த்துக் கொண்டு பதுங்கி இருந்த பற்குனன் எழுந்தான். திட்டத்துய்மனே

நோக்கி "அந்தணரும் அந்த லக்கை அடித்தால் அரிவையைப் பெற உரியரோ" என வினவினன். அதைக்கேட்ட அவன் அப்படியாயின் சிறப்பே" என்றான். சொன்னதுதான் தாமதம்; தனஞ்சயன் தக்ஷணமே ஏகி ஏவினை எய்து லக்கை அடித்தான். மன்னர் பலரும் மனம் வெட்கினர்கள். நாணத்தைப் பொறுக்க முடியாத சுயோதனன் முதலிய வேந்தர்கள், விசயன் மீது பாய்ந்தனர். கண்டான் காண்டீபன். காரிகையின் கையைப் பற்றிச் சென்று தருமன் பின் நிறுத்தினன். போருக்குப் புறப்பட்டான். அவனோடு அந்தணர் பலரும், வீமனும் விரவி அமர் புரிந்தார்கள். சற்று நேரத்திற் கெல்லாம் தரணிபர் தோற்று ஓடினர்.

தருமன் முதலியோர், தையலை அழைத்துக் கொண்டு குயவன் வீட்டைச் சேர்ந்தார்கள். உள்ளே இருந்த குந்தியை விளித்து, "தாயே! நாங்கள் ஒரு பொருளைப் பெற்றோம்; அதை என் செய்வது?" என வினவினர்கள். அவள் உள்ளிருந்தவாறே "நீங்கள் ஐவரும் எடுத்துக் கொள்ளுங்கள்" என்று உரைத்துக்கொண்டே வெளியே போந்தாள். போந்தவள் பொற்கொடிபோல் நிற்கும் பூவையைக் கண்டாள். திடுக்கிட்டு "ஆ! ஆ! என்ன கருதி, யாது கூறிவிட்டேன்!" என்று விழித்தாள். அவளைத் தருமன் பார்த்து "அம்மா! தங்கள் திருவாக்கே எங்கட்கு மந்திரம். அதன் பொருட்டு வருந்த வேண்டாம்" என்றான். அன்று இரவு அவ்வில்லத்திலேயே அனைவரும் தங்கியிருந்தனர்.

மறுநாள்காலை துருபதன், பல வாச்சியங்களுடன் குலாலன் வீட்டை அடைந்து, அனைவரையும் அழைத்துக் கொண்டு, அரண்மனை சேர்ந்தான். பார்த்தனுக்கும், பாஞ்சாலிக்கும் கடிமணம் புரியத் தொடங்கினன். தருமன், துருபதனைப் பார்த்து "நாங்கள் ஐவருமே நினது நங்கையை மணப்போம்" என்றான். அதற்கு அவன் இசையவில்லை. அங்கே வந்திருந்த வியாசர், பாஞ்சாலனுக்கு "அவ்விதம் செய்யத்தகும்" என்று இயம்பினர். அரசனும் அதற்கு ஒருப்பட்டு உவந்து மணம் முடித்தான். மணமக்கள் மகிழ்ச்சியோடு சில பகல் அங்கே தங்கியிருந்து பின் தங்கள் நகரத்தை நண்ணி வாழ்ந்திருந்தார்கள்.



## 4. காவிரி நதி

சென்னை ராஜதானியில் உள்ள பெரிய நதிகள் மூன்று. அவை கோதாவரி நதி, கிருஷ்ணா நதி, காவிரி நதி என்பன. அவற்றுள், கோதாவரியின் நீளம் எண்ணூற்றுத் தொண்ணூற்றெட்டுமைல். கிருஷ்ணா, எண்ணூறுமைல் நீளம் உடையது. நானூற்று எழுபத்தைந்து மைல் நீளம் உடையது காவிரி. ஆயினும், கோதாவரி, கிருஷ்ணா என்னும் இருநதிகளைக் காட்டிலும், காவிரியின் நீரே விவசாயத்திற்கு மிகுதியும் உபயோகப்படுகிறது. மைசூர் ராஜ்யத்தில் காவிரிக்குப் பன்னிரண்டு அணைகள் கட்டப்பட்டுள்ளன. ஸ்ரீரங்கத்திற்கு மேற்கில் ஓர்

அணையும், கிழக்கில் ஓர் அணையும் உண்டு. ஆகப் பதினான்கு அணைகளால் காவிரியின் நீர் திருப்பப்படுகிறது. இதனால், அந்நதியின் நீர் எவ்வளவு உபயோகமாகிறதென்று நாம் தெரிந்து கொள்ளலாம்.

காவிரி, மேற்குமலைத்தொடர்ச்சியில் உற்பத்தியாகிறது. அது உற்பத்தியாகும் இடம் குடகு நாட்டைச் சேர்ந்தது. அவ்விடத்திற்குத் தலைக்காவிரி எனப்பெயர். அங்கிருந்து மைசூர்பீடபூமியின் வழியாய் வந்து கிழக்கு மலைத் தொடரைத் துளைத்துக் கொண்டு, சென்னை ராஜதானியில் பாய்ந்து, சமுத்திரத்தில் சங்கமம் ஆகிறது. காவிரியாறு, மூன்றிடங்களில் பிரிந்து பிரிந்து கூடுகிறது. அவற்றுள் முதற் பிரிவின் நடுவில் இருப்பது ஸ்ரீரங்கப் பட்டணம். அதற்கு 'ஆதிரங்கம்' என்ற பெயரும் உண்டு. அங்கிருந்து ஐம்பதுமைல் தூரத்தில் மறுபடி பிரிந்து கூடுகின்றது. அதன் இடையில் 'சிவசமுத்திரம்' என்னும் தீவு இருக்கின்றது. அதனை 'மத்தியரங்கம்' என்றும் கூறுவது உண்டு. அவ்விடத்தில் காவிரி, முந்நூற்று இருபது அடி உயரமுள்ள (கிழக்குத் தொடர்ச்சி) மலையின் மீதிருந்து கீழே விழுகின்றது. அதற்குச் "சிவசமுத்திர நீர் வீழ்ச்சி" என்று பெயர். காவிரியில் ஜூன் ஜூலை மாதங்களில் பிரவாகம் மிகுதி. அப்பொழுது அந்நீர் வீழ்ச்சியின் காட்சி மிக நன்றாய் இருக்கும். உலகத்தில் முக்கியமாகப் பார்க்கவேண்டிய காட்சிகளுள் அஃதும் ஒன்று.



அந்நதி, சென்னை ராஜதானியில் பிரவேசித்த பின்பு, பவானி, அமராவதி என்னும் இரு நதிகள்

வந்து கலக்கின்றன. மூன்றாவதாக அது பிரிந்து கூடும் இடத்தின் நடுவில் ஸ்ரீரங்கம் உளது. அங்கே வடக்கே ஓடும் கிளைக்குக் கொள்ளிடம் என்று பெயர். தெற்குக் கிளைக்குக் காவிரி என்றே பெயர். காவிரி என்னும் கிளையில் இருந்து, பல கால்வாய்கள் வெட்டப்பட்டுள்ளன. அவை, சோழ ராஜாக்களால் வெட்டப்பட்டவை. காவிரி நதியின் டெல்டா ஸ்ரீரங்கத்தில் இருந்தே ஆரம்பிக்கின்றது. அந்த டெல்டாவின் வளத்தைக்கண்டு அதற்குத் 'தென் இந்தியத் தோட்டம்' என்று பெயர் வைத்தனர். அந்த டெல்டா, தஞ்சாவூர் ஜில்லாவைச் சேர்ந்தது.

மைசூர் ஜில்லாவில் ஆதிரங்கம் என்னும் இடத்தில் காவிரிக்கு ஒரு வாராவதி உண்டு. அது, மைசூர் அமைச்சர் பூர்ணையா என்பவரால் சுமார் நூற்றிருபத்து ஐந்து ஆண்டுகளுக்கு முன் கட்டப்பட்டது. அவ்வாராவதியின் நீளம் ஆயிரத்து நானூறு அடி. இன்னும் சிவ சமுத்திர நீர் வீழ்ச்சியால் உண்டாகும் சக்தியை உபயோகப்படுத்த அவ்விடத்தில் சில யந்திரங்கள் அமைக்கப்பட்டுள்ளன. அக்காரியத்தை மைசூர் மன்னருக்குத் திவானாக இருந்த சேஷாத்திரி ஐயர் அவர்கள் செய்தார்கள். முன்னே கூறிய அணைகள் தவிர மைசூர் ராஜ்யத்தார் சில வருஷங்கட்கு முன்னே புதிதாக ஒரு அணை கட்டியிருக்கின்றனர். அங்கே தேங்கும் நீர், அதிகமான நிலங்களைப் பயிர் செய்வதற்கு ஆதாரமாகிறது.

இந்துக்கள் காவிரியாற்றை ஒரு புண்ணிய நதியாகப் பாவித்து மூழ்குவது வழக்கம். காவிரியின் கரையில் ஜம்புகேஸ்வரம், திருவையாறு, கபிஸ்தலம், சுவாமிமலை, கும்பகோணம், மாயவரம்என்னும் க்ஷேத்திரங்கள் உள்ளன. "முன்னொருகாலத்தில், தேவேந்திரன் பூலோகத்துக்கு வந்து ஒரு நந்தவனம் வைத்தான். நீண்டகாலம் மாரி இன்மையால் அச்சோலைக்கு நீர் அருமை யாயிற்று. ஆகவே, ஆகண்டலன் மனம் வருந்தினன். விநாயகக் கடவுளை வேண்டினன். அப்பெருமான், காக்கை உருக்கொண்டு அகத்தியர் கமண்டலத்தைக் கவிழ்த்தார். அதிலிருந்த நீரே பெருகி காவிரி நதியாயிற்று"எனக் கதையும் வழங்குகின்றது.



## 5. நண்டு கொக்கைக் கொன்ற கதை

(பஞ்ச தந்திரம்)

1. மீன் ஒன்றையுமே தின்றுஉடல் மிகவே வளர்கொக்கு
தான் அங்கொரு பால் நண்டு தனைக்கண்டு இரைகொள்ள
ஞானம்தரும் மோனம்கொடு நண்ணும்படி கண்டு, அப்
பால்நண்டு இதை "நீ இங்குஉறை பண்பு எது உரை"
[என்ன,

2. "என் என்று உரை செய்வேன்; இனி யான் எங்ஙனம்
[உய்வேன்;
கொன் உந்திய வலைகாரர்கள் கூடிக்குளம், ஏரி,
மன்னும் தடம் எல்லாம்மிக வளைந்தே வலைவீசிச்
சின்னஞ் சிறு பொடிமீன்முதல் சேரப்பிடித்தாரே,

3. இந்தக்குளம் நாளைக்குளன எண்ணிக்கொடு போனர் ;
அந்தப் படி வந்தே பிடித்து அவர்காவில் எடுத்தே
சந்தக் கடை தொறும் மீன்கடை தானே என விற்பார் ;
எந்தப்படி இவர்தப்புவது என எண்ணி இருந்தேன் ;.

4. அந்தப் பழி காரர்வரும் முனமே ஒரு உபாயம்
சிந்தித்தனன் நான். அப்படி செய்தால் அவை உய்யும்.
எந்தப்படி யானும் அழைத்து இங்கே வருவாயேல்
இந்தக்குளம் விட்டு ஓர் தளம் எய்தும்படி செய்வேன்.''

5. என்றேபக ராசன் சொல, வியன் நண்டு அதை நம்பிச்,
சென்றேபல மீனொடு உரை செயவே அவை கூடி
நன்றே என வர ஒவ்வொரு நடைக்கு ஒன்று கொண்டு
[ஏகிக்
கொன்றேசில தின்றேசில கொடும் பாறையில் உலர்த்தி,

6. அலவன் தசை தனை உண்டிட அதையும் கொடுசெல அந்
நிலம் எங்கணும் மீன்என்புகள் நிறை கொண்டது கண்டே
நலது இங்கு இதுபல மீனையும் நனி தின்றது நமையும்
கொல வந்தது நாமும் இது கொலும்முன் கொலுவோமே;

7. நம்மால் வரு பிழையேஇது நாமும் அந்த மீன்போல்
சும்மா இருந்தனமேல் கொலும் அதிலே ஒரு சூழ்ச்சி
எம்மால் வகை வருமாறு இனி செய்வேம் எனஎண்ணி
அம்மா பகன் கழுத்தைக் கவை அடியால் நெருக்கியதே.

8. நெருக்குண்டு அற வீழ்ந்தே கொக்கு நீங்கிற்று உயிர்
[அலவன்
இருக்கும் தலம் ஏகித் தனது இனத்தோடு இருந்ததுவே.
செருக்கும் பகை பெரிதாகிலும் சில தந்திர வகையால்
முருக்கும்படி நினைந்தாலதின் முடியாததும் உளதோ.



## 2. திருமங்கை ஆழ்வார்

சோழமண்டலத்திலே ஆலிநாடு என்பது ஒன்று. அந்நாட்டில் குறையலூரில் கள்ளர் மரபினர் வாழ்ந்திருந்தனர். அவர்களில் ஒருவர், சோழ ராஜாவுக்குச் சேனைத்தலைவராய் இருந்தார். அச்சேனுபதியின் பிள்ளைக்கு நீலன் என்பது நாமதேயம். அப்பிள்ளை, சிறுவயதிலேயே ஆயுதப் பயிற்சியில் தேர்ந்து சேனைத்தலைவராயினர். பல யுத்தத்தில் நீலனுக்கு வெற்றி உண்டாயிற்று. அக்காரணத்தால் நீலனுக்குப் பரகாலன் என்னும் பெயர் வழங்கியது. பரகாலனுடைய திறமையைக் கண்டே சோழமன்னன் ஆலி நாட்டுக்கு அரசனுக்கிவிட்டான். ஆலி நாட்டிற்குத் தலைநகரமாயிருந்தது திருமங்கை. ஆகையால் பரகாவனுக்குத் திருமங்கை மன்னன் என்னும் பெயர் ஏற்பட்டது.

திருமங்கை மன்னனுக்கு மணம் செய்து கொள்ளவேண்டும் என்கின்ற எண்ணம் உண்டாயிற்று. அவர், குமுதவல்லி என்னும் பெண்ணை மணக்க விரும்பினுர். அப்பெண் சோழநாட்டுத் திருவெள்ளக்குளத்தில் வைஷ்ணவ மருத்துவர் வீட்டு மகள். அம்மங்கை, திருமங்கை மன்னனைப்பார்த்து "நீர் பஞ்ச சம்ஸ்காரங்களும் பெறவேண்டும்; அன்றியும் ஓராண்டு அளவும் பாகவதர்களுக்கு அமுது அளிக்கவேண்டும்; இதற்குச் சம்மதித்தால் நான் மணந்துகொள்வேன்." என்ருள். அவரும் அதற்கு ஒருப்பட்டு மணந்து கொண்டார். விஷ்ணு

பக்தர்கட்கு அசனம் ஈந்துவந்ததால் கைப்பொருள் அதிகமாகச் செலவழிந்தது. சோழனுக்குச் செலுத்த வேண்டிய திறை கொடுபடவில்லை.

திருமங்கை மன்னனிடம் இறை பெறுதற்குச் சேனைத்தலைவன் ஒருவனைச் சோழன் அனுப்பினன். சென்ற சேனபதிக்கும், பரகாலனுக்கும் யுத்தம் நடந்தது. சேனைத் தலைவன் தோற்று ஓடினன். பின்னர், சோழனே நேரில்வந்து, பரகாலனது பராக்கிரமத்திற்கு வியந்து, அவனைத்தன் அமைச்சனிடம் ஒப்பித்துச் சென்றான். மந்திரியின் தொந்தரவால் மங்கை மன்னன், காஞ்சிப்பதிக்குச் சென்று, பொருள் பெற்றுத் திறையை அளித்தார். கையில் இருந்த பொருள் முற்றும் தொலைந்தபடியால் திருமங்கைமன், வழிபறி கொள்ளை செய்ய ஆரம்பித்தார். அதனல் கிடைப்பதைக் கொண்டு பக்தர்களை உண்பித்தார்.

பக்தர்களை ஆதரிக்கும் மன்னன்மீது பதுமநாபனுக்குப் பரிவு ஏற்பட்டது. தான், மணக்கோலம் பூண்டு திருமாதினுடன் புறப்பட்டார். திருமங்கை அரசன் கொள்ளையடிக்கும் வழியே வந்தார். அவர்களைக்கண்ட மன்னனுக்கு மகிழ்ச்சி பொங்கிற்று. உடனே மடக்கி, உபத்திரவம் செய்து, ஆடை அணிகளைப் பிடுங்கினர். அப்பொழுது அவருக்கு ஏற்பட்ட பெயர் ‘ கலியன் ’ என்பது. கலியனுக்குத் திருமால் அஷ்டாக்ஷர மந்திரத்தை உபதேசித்தார். உபதேசம் பெற்ற கலியனுக்கு

ஞானம் உதித்தது. அதுமுதல் ஸ்ரீநிவாசனைத் துதிக்கத் தொடங்கினர். அக்காரணத்தால், திரு



மங்கை ஆழ்வார் என்னும் திவ்விய நாமம் வழங்கி வரலாயிற்று. இவர் ஆசுகவி, மதுரகவி, சித்திரக்கவி, விஸ்தாரக்கவி என்னும் நான்குவகைச் செய்யுட் களும் செய்யவல்லவர். ஆதலால், நாற்கவிப் பெரு மாள் என்றும் புகழ்ந்துரைக்கப்பட்டார்.

திருமங்கை ஆழ்வார், திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம் என்னும் நூல்களை இயற்றினர். இப்பாடல்களே நாலாயிரம் திவ்வியப் பிரபந்தத் துள் இரண்டாம் ஆயிரமாக உள்ளன. இன்னும் பெரிய திருமொழி, திருஎழுகூற்று இருக்கை, சிறிய திருமடல், பெரியதிருமடல் என்னும் நான்கும் செய் துளார். இவர் பாடிய பாடல்களுள் ஒன்றை இங்கே கூறுவோம் :

இந்திரற்கும் பிரமற்கும் முதல்வன் தன்னை
இருநிலம் கால் தீநீர்விண் பூதம் ஐந்தாய்ச்

செந்திறத்த தமிழோசை வடசொல் ஆகித்
திசை நான்குமாய்த் திங்கள் ஞாயிறு ஆகி

அந்தரத்தில் தேவர்க்கும் அறியல் ஆகா
அந்தணனை அந்தணர்மாட்டு அந்திவைத்த

மந்திரத்தை மந்திரத்தால் மறவாது என்றும்
வாழுதியேல் வாழலாம் மடநெஞ்சமே.



## 7. திங்களும் திதிகளும்

சந்திரனுக்கு உள்ள பெயர்களுள், திங்கள் என்பது ஒன்று என முன் வகுப்பில் அறிந்தீர்கள். இவ்வகுப்பில் அத்திங்களைப் பற்றிச் சில விஷயங்களை நாம் அறிந்துகொள்வோம்.

நமக்கு, இரவில் ஒளி தருவது இந்து. அது பூமியைப் போலவே ஒரு கிரகம் என்பதும் உங்கட்குத் தெரியும். "திங்கள் பூமியிலிருந்து பிரிந்தது" என்று அறிஞர் கூறுவர். அது பூமியைச் சுற்றிக்கொண்டே இருக்கின்றது. நாம் அதை உற்றுப் பார்க்கும்பொழுது அதன் மத்தியில் கறுப்புத் தோன்றும். அக்கருமையைக் களங்கம் என்பது மரபு. களங்கத்திற்கு 'முயல்' என்றும், 'மான்' என்றும் பெயர். களங்கத்தைப் பார்த்து, "ஒரு மரத்தின்கீழ் அவ்வையார் கிழவி தோசை சுடுகிறாள்",

என்று சில பிள்ளைகள் பிதற்றுவார்கள். மதியில் அமைந்துள்ள பள்ளமான பாகங்களே கறுப்பாகத் தோன்றுகின்றன. மலைப் பகுதிகள் விளக்கமாகத் தெரிகின்றன. சந்திரனுகிய கிரகத்தில் ஜலபாகமே இல்லை என்று இசைக்கின்றனர்.

சோமனுக்குச் சுயமான ஒளி இல்லை. அருக்கனுடைய ஒளி அம்புலியின் மீதுபட்டுப் பிரதிபலிக்கிறது. ஆதலால்தான் நிலவின் வெளிச்சம் வெப்பமாய் இல்லை. சந்திரனுடைய ஒளி நமக்குக் கிடைக்க வேண்டுமானல், சூரியனுக்கு எதிர்முகமாகச் சந்திரன் இருந்து, இவற்றின் இடையில் பூமி இருக்க வேண்டும். அப்போது சூரியனுடைய ஒளிபடாத இருண்ட பாகத்தில் சந்திரனுடைய ஒளி பிரகாசிக்கும். சூரியனுடைய வெய்யிலில் திங்களின் நிலவு பிரகாசிக்காது.

அமாவாசை தினத்தின் இரவில் இந்து தோன்றுவதில்லை. அமாவாசைக்கு மூன்ரும்நாள் மேற்குத் திக்கில் நகக் குறிபோல் கொஞ்சம் தோன்றும். அவ்வுரு, அரிவாள் போல் இருக்கும். அதை மூன்ரும் பிறைச்சந்திரன் என்பது வழக்கம். அது சற்றுநேரத்திற்குள் மறைந்துவிடும். அது அதிக ஒளியையும் தராது. அடுத்தநாள், இன்னும் சற்று மேலே உருவத்தில் சிறிது வளர்ந்து தோன்றும். அப்படியே தினம் கொஞ்சமாகக் கிழக்கே நகர்ந்து நகர்ந்து வடிவத்திலும் வளர்ச்சி அடைந்து பதினைந்தாம்நாள் பூரண வட்டமாகத் தோன்றும். அன்று

சூரியன் மேற்கில் மறைவதும், சந்திரன் கிழக்கே உதிப்பதும் ஒரே சமயமாக இருக்கும். பூர்ணச் சந்திர உதயத்து இரவு முழுதும் நிலவு காயும். அந்த தினத்தைப் பௌர்ணமி என்று சொல்வோம்.

பௌர்ணிமைக்கு மறுநாள் சூரியன் மறைந்து இரண்டு நாழிகை சென்று கிழக்கே சந்திரன் தோன்றும். அன்று அதன் வட்ட வடிவம் கிஞ்சிற்றுக் குவிந்து காணும். அப்படியே தினம் இவ்விரண்டு நாழிகைக்குப்பின் தோன்றி, உருவத்திலும் தேய்ந்துகொண்டே வரும். அமாவாசைக்கு முன்நாளில் பொழுதுபுலர்வதற்கு இரண்டுநாழிகை இருக்கும்போதுதான் நிலவு தோன்றும். அத்தினத்தில் மூன்ரும் பிறைபோல்தான் இருக்கும். ஆனுல், இது விடியற்காலம் உதிக்கும். மூன்ரும் பிறை மாலையில் தோன்றும். அவ்வளவுதான் வேற்றுமை.

அமாவாசைக்கு அடுத்த தினத்தில் இருந்து, பௌரணை வரையில் சந்திரன் வளரும் காலம். அக்காலத்தை வளர்பிறை அல்லது சுக்கிலபக்ஷம் என்போம். (பக்ஷம்=பதினைந்து நாள்.) பௌர்ணமிக்கு அடுத்தநாள் தொடங்கி, அமாவாசைவரையில் நிலவு தேய்கிறது. அப்பக்ஷத்தைத் தேய்பிறை அல்லது கிருஷ்ணபக்ஷம் என்கிரேம். பக்ஷங்களின் ஒவ்வொரு தினத்திற்கும் திதி என்றுபெயர். அவற்றை இங்கே கூறுவோம் :—

| அமாவாசைக்கு அடுத்த கிழமையில் இருந்து, பௌர்ணமி வரையில் | பௌரணைக்கு மறு தினத்தில் இருந்து அமாவாசை வரை |
|---|---|
| சுக்கிலபக்ஷம் பிரதமை | கிருஷ்ணபக்ஷம்பிரதமை |
| ,, துதியை | ,, துதியை |
| ,, திருதியை | ,, திருதியை |
| ,, சதுர்த்தி | ,, சதுர்த்தி |
| ,, பஞ்சமி | ,, பஞ்சமி |
| ,, சஷ்டி | ,, சஷ்டி |
| ,, சப்தமி | ,, சப்தமி |
| ,, அஷ்டமி | ,, அஷ்டமி |
| ,, நவமி | ,, நவமி |
| ,, தசமி | ,, தசமி |
| ,, ஏகாதசி | ,, ஏகாதசி |
| ,, துவாதசி | ,, துவாதசி |
| ,, திரயோதசி | ,, திரயோதசி |
| ,, சதுர்த்தசி | ,, சதுர்த்தசி |
| ,, பவுரணை | ,, அமாவாசை |

சிலர், சுக்கிலபக்ஷம் பிரதமை திதி முதல் அமாவாசை வரையில் ஒரு மாதமாகக் கணக்கிடுகின்றனர். அதற்குச் "சாந்திர மாதம்" என்று பெயர். அதுபற்றியே யுகாதி, பங்குனி மாதம் அமாவாசைக்கு மறுநாள் வருகிறது. தமிழர்க்குச் சித்திரை மாதம் முதல் தேதி வருஷப் பிறப்பு ஏற்பட்டுள்ளபடி, தெலுங்கர்களுக்கு யுகாதி தினமே வருஷப் பிறப்பாம். ஆதலால், யுகாதியைத் 'தெலுங்கு

வருஷப் பிறப்பு' என்று கூறுவது வழக்கம். இதைக்கொண்டு திதி என்பதும், தேதி என்பதும் ஒன்று என்றே கூறலாம்.



## 8. ரகரமும், றகரமும்—I.

அரம்=பொன் முதலியவற்றை அராவும் கருவி.
அறம்=தருமம்.

பொன்னை அரத்தால் ராவி அறம் செய்தான்.

அரிவாள்=அறுக்கும் கத்தி.
அறிவாள்=தெரிந்துகொள்ளுவாள்.

அரிவாளைக் கொண்டு அறுப்பு அறுக்க என் தங்கை அறிவாள்.

அருகு=சமீபம். அறுகு=சிங்கம்.

என் அருகே ஓர் அறுகு வந்தால் நான் அஞ்சுவேன்.

அரை=பாதி. அறை=சொல்லு.

நான் சொன்ன கதையில் நீ அரைகூட அறையவில்லை.

ஆர=நிறைய. ஆற=தணிய.

நான் வயிறு ஆரப் புசிக்கலாம் என்று வந்தேன். ஆனால் சாதம் சூடு ஆறவில்லை.

ஆரு=தங்கு. ஆறு=நதி, 6.

நான் சென்னையில் ஆறு நாட்கள் ஆருவதற்குச் சென்றேன். அப்போது ஆறு பெருகிற்று.

இரங்கி=அருள்கொண்டு. இறங்கி=கீழே இழிந்து.

தெருவில் சென்றவனைக் கண்டு மனம் இரங்கிச் சீமாட்டி கீழே இறங்கினாள்.

இரடி=கால் தவறி. இறடி=கருந்தினை.

மரத்தில் இருந்த பக்ஷி இரடி அருகில் இருந்த இறடிப் பயிரில் விழுந்தது.

இரத்தல்=யாசித்தல். இறத்தல்=சாதல்.

வீடுகள்தோறும் இரத்தலைக் காட்டிலும் இறத்தலே மேல்.

இரவு=இராத்திரி. இறவு=சாதல்.

திங்கட்கிழமை இரவு கிழவனுக்கு இறவு நேர்ந்தது.

இரை=உணவு. இறை=அரசன்.

வயிற்றுக்கு இரை இல்லாத ஏழைகளை இறையே காக்கக் கடமைப்பட்டவன்.

உரம்=மார்பு. உறம்=வலிமை.

வீமன் குத்து பகனுடைய உரத்தில் தாக்கி உறத்தை அழித்தது.

உரவு=ஞானம். உறவு=பந்து.

கல்வி உரவு உடையவன் தன் உறவினரைக் கைவிடமாட்டான்.

எரி=தீ. எறி=வீசிப் போடு.

வீடு பற்றி எரிந்தால் கூரையைப் பிரித்து எறிய வேண்டும்.

ஏரி=நீர்நிலை. ஏறி=மேலே ஏறி.

ஏரி நீரில் விழுந்த இளைஞன் இறைவன் அருளால் கரை ஏறினன்.

கர=ஒளி. கற=பீச்சு.

சூரியன் மேற்கே கரந்தபோது நான் பசுவின் பாலைக் கறந்தேன்.

கரி=யானை. கறி=பதார்த்தம்.

கரியின்மீது ஏறிவந்தவன் உண்ணக் கறி சமைத்தான்.

கருப்பு=பஞ்சம். கறுப்பு=கருமைநிறம்.

மழை இன்றிக் கருப்பு ஏற்பட்டபோது கறுப்பான மனிதன் ஒருவன் இறந்தான்.

கரை=எல்லை. கறை=உதிரம்.

குளக்கரையில் விழுந்தவனுடைய வாயில் கறை வெள்ளமாகப் பெருகிற்று.

கிரி=மலை. கிறி=பொய்.

கிரியில் வசிக்கும் வள்ளி இடத்தில் முருகன் கிறி பேசினன்.

கீரல்=சொல்லல். கீறல்=கிறுக்கல்.

என் வாயால் கீரியபடி எழுதாமல், ஏன் கண்டபடி கீறுகிருய்?

குரங்கு=வானரம். குறங்கு=தொடை.

மரத்தில் இருந்த ஒரு குரங்கு இறங்கிவந்து என் குறங்கின்மீது உட்கார்ந்தது.

குரவர்=பெரியோர்.
குறவர்=மலையில் வாழும் குறச் சாதியார்.

இரு முது குரவருக்காகக் குறவரிடம்சென்று தேன் கேட்டேன்.

குரை=ஒலி. குறை=குறைவு.

இரவில் நாய் குரைப்பதனால் என் தூக்கம் குறைந்தது.

கூர=மிக. கூற=சொல்ல.

என்மீது கருணைகூரச் சென்று, நான் கூறியதை ஆசானிடம் கூற வேண்டுகின்றேன்.

கூரிய=கூர்மையான. கூறிய=சொன்ன.

திருடன், கூரிய ஈட்டியைக் காட்டிக் கூறிய வார்த்தை கொடுமையானது.

கூரை=வீட்டு இறப்பு. கூறை=புதிய துணி.

வீட்டுக் கூரையின்மீது இருக்கும் கூறையை வண்ணானுக்குப் போடு.

கோரி=விரும்பி. கோறி=கொன்று.

பணத்தைக் கோரிச் சென்றவனைப் பாவி கோறிவிட்டான்.



## 9. ரத்தம்

நமது உடல் முழுதும் ரத்தம் பரவி இருக்கின்றது. ஆனாலும் மயிர், நகம், மேல்தோல் ஆகியவற்றில் ரத்தம் இல்லை. ரத்தம், இருதயத்தில் இருந்து

சென்று தேகத்திலுள்ள எல்லாப் பாகங்களிலும் பாய்கிறது. இருதயம் எங்கே இருக்கின்றது? மார்பின் மத்தியில் இருக்கின்றது. நமது மார்பில் கையை வைத்துப்பார்த்தால் டிக்,டிக் என்று ஒரு ஒலி உண்டாகின்றது. அவ்வோசை இருதயத்தின் அடிப்புத்தான். இருதயம், இப்படிப்பட்ட வேலையை நாம் பிறந்தபோது ஆரம்பித்தது. நாம் இறக்கும் வரையில் விடாமல் செய்துகொண்டிருக்கிறது. அது என்ன செய்கிறது? சுருங்கி விரிகிறது. அக்காரியம் நடவாவிட்டால், நமது தேகத்தில் ரத்த ஓட்டம் இல்லை. ரத்த ஓட்டம் நின்றால், நாம் ஒரு நிமிஷமும் பிழைத்திருக்க முடியாது. நாம், உயிர் பெற்றிருக்கத் தகுந்தவாறு ரத்தம் என்ன காரியம் செய்கிறது என்று பார்ப்போம்.

நாம் சுவாசிக்கும் காற்று, சுவாச கோசத்தின் உள்ளே போய்ச் சேர்கிறது. உடனே அதிற் கலந்துள்ள பிராண வாயுவை ரத்தம் கிரகித்துச்சென்று, உடம்பு முழுதும் பரவுகிறது. தேக முழுதும் பரவியுள்ள ஆகார பதார்த்தம் எரிவதற்குப் பிராணவாயு அவசியமானது. அவை எரிவதனால் உண்டாகும் கரிமல வாயுவையும், மற்றுமுள்ள அழுக்குகளையும் ரத்தமே வெளிப்படுத்துகிறது. இருதயத்திலிருந்து வெளிப்படும் ரத்தம் சிவந்த நிறமானது. அவயவங்களில் இருந்து கரிமல வாயுவையும், அழுக்குப் பொருளையும் சேர்த்துக்கொண்டு இருதயத்திற்குள் செல்லும் ரத்தம் கறுப்பானது. இருதயம் இரு பிரிவையுடையது. அவற்றுள் வலது அரையில்

அசுத்த ரத்தம் வந்து சேரும். இடதுபக்கத்து அரையில் இருந்து சுத்த ரத்தம் வெளிப்பரவும்.

நமது தேகத்தை உற்றுப் பார்த்தால், சில விடங்களில் பசுமை நிறமான நரம்புகள் தோன்றும். அவைகளே கெட்ட ரத்தம் நிறைந்த குழாய்கள். சுத்த ரத்தம் ஓடும் குழாய்களுக்குத் தமனிகள் என்றும், அசுத்த ரத்தம் செல்லும் குழல்கட்குச் சிரைகள் என்றும் பெயர். சிரைகள் மூலம் சுவாசாசயத்திற்கு வந்து சேர்ந்த ரத்தம் கரிமல வாயுவைக் கழித்துவிடுகிறது. பிராணவாயுவை ஏற்று மறுபடி வெளிக் கிளம்புகின்றது. இனி, ரத்தத்தில் உள்ள பொருள்களைக் கவனிப்போம் :—

ரத்தத்தில் சிவப்பு அணுக்களும், வெள்ளை அணுக்களும் கலந்துள்ளன. ஆனால், சிவப்பு அணுக்களே மிக அதிகம். அவை ஐந்நூறு மடங்கும், வெள்ளை அணுக்கள் ஒரு மடங்குமாக விரவியுள்ளன. இவையன்றி, சீரம் என்னும் ஒருவகை நீரும் ரத்தத்தோடு கலந்திருக்கின்றது. ரத்தத்தில் உள்ள இருவித அணுக்களுக்கும் உயிர் உண்டு. பிராணவாயுவை உறுப்புக்களுக்கு ஊட்டுவதும், அசுத்தங்களை வெளியேற்றுவதும் ஆகிய காரியங்களைச் சிவப்பு அணுக்கள் செய்கின்றன. வெண்மையான அணுக்களோ, தேகத்தில் வியாதியை உண்டுபண்ணுகின்ற விஷக் கிருமிகளோடு சண்டை புரிவன. அவ் வெள்ளை அணுக்கள் வெற்றியடைந்தால் வியாதியே வருவதில்லை. சில சமயம் வெள்ளை

அணுக்களைக் காட்டிலும், விஷக் கிருமிகள் வலியன வாகி ஜயம் அடைவதும் உண்டு. அப்போதுதான் தேகம் நோய் அடைந்து வருந்துகின்றது. ரத்தம் நமது உடலுக்கு எவ்வளவு உபகாரம் செய்கிறது என்பதை யோசித்துப் பாருங்கள்.



## 10. நன்று

1. அதிகாலை யில்எழுந்து, ஆண்டவ னைத்து தித்து,
மதிமிகும் தந்தைதாயர் மலர்அடி போற்றி செய்து,
நதிகுளம் நோக்கிச்சென்று, நாள்தொறும் கடன்முடித்து,
விதியுடன் பாடசாலை வேலைகள் முடித்தல் நன்றே.

2. பாட்டினைப் பாடம்செய்து, பரிவுடன்கணக்கும் போட்டு,
நாட்டமாய்க் காபி எழுதி, நல்ல வாசகம் படித்து,
வேட்டியைக் கசக்கிப் போட்டு, வியர்வையைக் கழுவிப் [பொட்டுத்
தீட்டியே, உண்டு, உடுத்துத் தினம்பள்ளி ஏகல்நன்றே.

3. பள்ளியில் நல்லபாலர் பழக்கமே செய்து, பாடம்
கொள்ளவும், குருமார் முன்னே குற்றம் ஒன்றும் [செய்யாமல்
எள்ளுதல் இன்றி, மாலை இல்லினை அடைந்து, சற்று
உள்ளமே மகிழ ஆடி, ஊக்கமாய்ப் படித்தல் நன்றே.

4. கல்வியே உலகில் நல்ல கைப்பொருள் என்று கற்று,
நல்விவே கத்தால் மிக்க நயகுணத் தோடு யார்க்கும்
பல்வித உதவி செய்து, பலபுகழ் பெற்று உயர்ந்து,
செல்வமே சிறந்தபோதும் செருக்கு இன்றி வாழ்தல் [நன்றே.

5. சிறியது ஓர் உதவிதன்னைச் செய்தவர் இடத்தும் நன்றி
நெறியுடன் காட்டல் நன்று, நெஞ்சினில் கருணை கொண்டு
அறிவொடும் உயிர்கள்நம்மை அனைய என்று அருளல்
[நன்று
இறைவனுக்கு இன்பமாக என்றும்என்றும் ஒழுகல்நன்றே.

6. பொய்மொழி விட்டு, மெய்யே புகலுதல்,சினம்இல்லாமை,
செய்வதற்கு இயல்வது எல்லாம் செய்திடல், கொலை
[செய்யாமை,
செய்வினை திருந்தச் செய்தல், தேடிய பொருளைக் காத்தல்,
தெய்வம்ஒன்று உண்டுஎன்றுஎண்ணிச் செம்மையாய்
[ஒழுகல் நன்றே.



## 11. உபகாரம் வீண்போகாது—I.

மேல் நாட்டில், 'வேனிஸ்' என்று ஒரு நகரம் உண்டு. அந்நகரத்தில், 'அந்தோனியோ' என்னும் பிரபு ஒருவர் இருந்தார். அவர், பெரிய கப்பல் வியாபாரி. மிகுந்த தயாள குணம் உடையவர். ஏழைகளுக்கு எப்படிப்பட்ட உதவிகளையும் செய்வார். பலருக்குக் கடனாகப் பணம் உதவுவார். தான் கொடுத்த கடனுக்கு வட்டி வாங்கமாட்டார். வாங்கினவன் திருப்பிக் கொடுத்தால் அன்றி, முதலையும் தானாகக் கேட்பதில்லை. என்றாலும், அவருக்கு ஏராளமான செல்வம் சேர்ந்திருந்தது. அந்தோனியோவைப் புகழ்ந்து பேசாதவர்கள் யாரும் இல்லை. அந்நகரத்தில் இருந்த 'பெசானியோ' என்னும் வாலிபனுக்கும் அந்தோனியோவுக்கும் நேசம் உண்டு. பெசானியோ, அழகிலும் குணத்திலும் சிறந்த

பெண் ஒருத்தியைப் பார்த்தான். அவளை மணந்து கொள்ள அவனுக்கு ஆசை உண்டாயிற்று. அப் பெண்ணின் பெயர், 'போர்ஷியா.' அவள், மிகுந்த பணக்காரி. பெசானியோவை மணந்துகொள்ள அவளும் விரும்பினாள். அவனிடத்தில் பணம் இல்லை. என்ன செய்வதென்று அவனுக்குத்தோன்றவில்லை. முடிவில் அந்தோனியோ இடத்திற்குச் சென்றான்.

அந்தோனியோ :—வந்தனம், பெசானியோ ! வாருங்கள் உட்காருங்கள்.

பேசா :—அநேக வந்தனம். (உட்காருகின்றான்)

அந்தோ :—நேசரே ! யாது விசேஷம்.

பேசா :—நண்பரே ! நான் மணம் செய்துகொள்ள வேண்டும் என்று விரும்புகின்றேன்.

அந்தோ :—சந்தோஷம் ! அதற்கென்ன தடை ! போர்ஷியா என்னும் சீமாட்டி தங்களை மணக்க விரும்பிவிட்ட பின்பு உங்களுக்கென்ன குறை ?

பேசா :—ஆயினும், என் கையில் பொருள் இல்லை. அதற்காகத்தான் தங்களைக் கேட்கலாம் என்று வந்தேன்.

அந்தோ:—அப்படியா ! தங்களுக்கு எவ்வளவு வேண்டி இருக்கும் ?

பேசா :—எனக்கு ' முப்பதாயிரம் பவுன் ' வேண்டும்.

அந்தோ :—சரி ; (யோசிக்கின்றார்) வாருங்கள்.

பெசானியோ கேட்ட சமயத்தில் அந்தோ னியோ இடத்தில் பொருள் இல்லை. அதனுலே யோசித்தார். அவ்வூரில் இருந்த ஷைலக் என்பவன் இடம் வாங்கிக் கொடுக்கலாம் என்று எண்ணம் உண்டாயிற்று. பெசானியோவை அழைத்துக் கொண்டு அந்தோனியோ புறப்பட்டார்.

ஷைலக், கொஞ்சமும் கருணை இல்லாதவன். ஒற்றைக்கு இரட்டிப்பாக வட்டி வாங்குவான். அவனைக் காணும்போதெல்லாம் அந்தோனியோ புத்தி கூறுவார். “நீ ஏன் அதிக வட்டி வாங்குகின்ருய்? ஏழைகளுக்கு உதவக்கூடாதா?” என்று கேட்பார். என்னசொன்னுலும், அவன் தன்கெட்ட வழக்கத்தை விடவில்லை. அந்தோனியோ மீது அவனுக்குப் பொருமை ஏற்பட்டது. அந்தோனியோவுக்கு எப்படியாவது தீமை செய்யவேண்டும் என்று, ஷைலக் பல நாட்களாகக் கருதியிருந்தான். அதற்குத் தக்கவாறு அந்தோனியோ அவன் இல்லத்தை அடைந்தார்.

ஷைலக் :—பிரபுவே! வரவேண்டும்; வந்தனம்.

அந்தோ :—வந்தனம் நண்பரே!

ஷைலக் :—உட்காருங்கள். தங்களோடு வந்திருக்கும் நண்பர் யார்?

அந்தோ :—இவர் என் அருமை நேசர். ‘பெசானியோ’ என்பது இவர் பெயராகும். (உட்காருகிருர்.)

ஷைலக் :—வந்தனம் ஐயா! அமருங்கள்.

பேசா :—வந்தனம். (அமர்கின்ருன்).

ஷைலக் :—நண்பரே! ஏது இவ்வளவு தூரம் வந்துவிட்டீர்கள்?

அந்தோ :—எனக்குத் தங்களால் ஒரு பெரிய உபகாரம் ஆகவேண்டும்.

ஷைலக் :—என்ன! உபகாரமா? தங்களால் ஆகாத காரியமா என்னுல் முடியப்போகிறது?

அந்தோ :—ஆம்; எனக்கு முப்பதாயிரம் பவுன் கடன் வேண்டும்.

ஷைலக் :—ஆஹா நன்ருய் இருக்கின்றது! என்னைப் பரிகாசம் செய்கின்றீர்களா?

அந்தோ :—அப்படி ஒன்றும் இல்லை; என்னுடைய கப்பல்கள் திரும்பி வராததால், தங்களைக் கேட்கின்றேன். மூன்று மாதத்திற்குள் திருப்பிக் கொடுத்துவிடுகின்றேன். எவ்வளவு வட்டியானுலும் சம்மதந்தான்.

ஷைலக் :—ஐயா! தாங்கள் பெரிய ஐசுவரியக்காரர். தங்களிடத்தில் யான் வட்டி வாங்கமாட்டேன். ஆனுல், மூன்று மாதத்திற்குள் தவருமல் கொடுத்துவிட வேண்டும்.

அந்தோ :—நிச்சயமாகக் கொடுத்து விடுகின்றேன்.

ஷைலக் :—அது சரிதான்; தங்களுக்கு மிக்க செல்வம் உண்டு; கொடுத்துவிடுவீர்கள்; ஆயினும் ஒரு ஏற்பாடு செய்யவேண்டும்.

அந்தோ :—என்ன ஏற்பாடு செய்யவேண்டும்? எழுதித் தருகின்றேன்.

ஷைலக் :—ஒருவேளை கொடுக்கத் தவறிவிட்டால்? 'யானைக்கும் அடிசறுக்கும்' அன்றோ!

அந்தோ :—இரட்டிப்பாகத் தருகின்றேன்.

ஷைலக் :—அப்படி ஒன்றும் வேண்டாம்; தங்களுடைய ஹிருதயத்திற்கு நேராக ஒரு பவுண்டு எடை தசை கொடுத்தால் போதும்.

அந்தோ :—ஆஹா; தடை இல்லை. அவ்வாறே எழுதித் தருகின்றேன்.

என்று, எழுதித் தந்து முப்பதாயிரம் பவுன் வாங்கி, பெசானியோவுக்கு அளித்தார். பெசானியோ வாங்கிக்கொண்டு சென்றான்.



## 12. உபகாரம் வீண்போகாது—II

பணம் வாங்கிச் சென்ற பெசானியோ கலியாணத்திற்கு ஏற்பாடுகளைச் செய்தான். எல்லா வேலைகளும் முடிந்தன. மண நாளும் கிட்டியது. இதற்குள், மூன்று மாத கெடுவும் கடந்துவிட்டது. மணம் நடந்துகொண்டிருக்கின்றது. அந்தோனியோவின் வியாபாரக்கப்பல்கள் வரவே இல்லை. அவை வராதவாறு வஞ்சகம் புரிந்தவன் ஷைலக். எவ்விதமாயினும் அந்தோனியோவைக் கொன்றுவிடவேண்டும் என்றே, அவன் அவ்வாறு செய்தான். கெடு நாள் கழிந்த மறுதினமே உடன்படிக்கையை நீதிபதியிடம் தாக்கல் செய்தான். நியாயாதிபதி அந்

தோனியோவை வருமாறு உத்தரவு அனுப்பினர். அவ்வுத்தரவைக் கண்ணுற்ற அந்தோனியோ, பெசானியோவுக்கு ஒரு நிருபம் அனுப்பினர். பெசானியோ மணக்கோலத்துடன் மணைமேல் உட்கார்ந்திருக்கும் போது தூதுவன் கடிதத்தைத் தந்தான். அதில்,



அன்புள்ள நண்பர் பெசானியோவுக்கு அநேக வந்தனம். தங்கள் திருமண காலத்தில் ஒரு வருத்தமான செய்தி கூற வேண்டியிருக்கிறது. அதாவது :— நான் ஷைலக் இடத்தில் வாங்கிய கடனை இன்னும் தீர்க்கவில்லை. அந்தக் கெடுவும் தவறிவிட்டது. ஆதலால், என் ஹிருதயத்திற்கு நேராக ஒரு பவுண்டு சதை கொடுக்கவேண்டும். நான் இறப்பது நிச்சயம். அதற்குள் தங்களை ஒரு முறை பார்க்கவேண்டும் என்னும் ஆசை கொண்டுளேன்.

இங்ஙனம் அன்புள்ள,

அந்தோனியோ.

என்று வரைந்திருந்தது. அதைப் படித்த உடனே பெசானியோ திகில் அடைந்தான். உடம்பு வேர்த்தது. ஹிருதயம் வேகமாகத்துடித்தது. 'ஐயோ! என்னால் அல்லவா அந்தோனியோவுக்கு மரணம் ஏற்பட்டது! உபகாரம் செய்த உத்தமரைக் காப்பாற்ற எனக்குச் சக்தி இல்லையே! என் நண்பர் மனம் எவ்வித இன்னலை அடைகிறதோ! அவர் அங்கே வருந்த நான் இங்கே மகிழலாமா! நான் பாவியாய் விட்டேனே' என்று, பலவாறு எண்ணி முகவாட்டத்தோடு உட்கார்ந்திருந்தான்.

கணவன் கலக்கத்தைப் போர்ஷியா கண்டாள். "அன்புள்ள நாதா! தங்களுக்கு யாது மனக்குறை? ஏன் ஆழ்ந்த சிந்தையோடும் அமர்ந்திருக்கின்றீர்? முகம் வாட்டமுற்ற காரணம் என்ன?" எனப் பரிவுடன், பக்கத்திற்சென்று வினவினாள். பெசானியோ நடந்தவரலாற்றை நவின்றான். அதைக் கேட்ட போர்ஷியா "நாயகா! என்னிடத்தில் மிகுந்த திரவியம் இருக்கின்றதே! அது யாருக்காக இருக்கின்றது? தங்களுக்கு வேண்டிய அளவு எடுத்துச் செல்லுங்கள்; ஷைலக் எவ்வளவு விரும்பினாலும் கொடுத்து விட்டுத் தங்கள் நண்பரைக் காப்பாற்றுங்கள்; நன்றி செய்தவரை நாம் காட்டிக் கொடுக்கலாகாது; சீக்கிரம் புறப்பட்டுச் செல்லுங்கள்; தாமதித்தல் கூடாது" என்று பொருள் அளித்து அனுப்பினாள்.

பெசானியோ விரைந்து சென்றான். அவன் சென்றதும் போர்ஷியாவிற்கு ஒரு யுக்தி தோன்றி

யது. தான் ஒரு வக்கீலைப்போல வேடம் தரித்துக் கொண்டு நீதிஸ்தலத்திற்குப் புறப்பட்டாள். முன்பே சென்ற பெசானியோ, நீதி மன்றத்தை அடைந்தான். ஷைலக்குக்குச் சேரவேண்டிய பொருளைக் கட்டுவதாகக் கூறினன். ஷைலக் சம்மதிக்கவில்லை. "வாங்கியதைவிட எத்தனையோ மடங்கு அதிகமாகத் தருவேன்" என்று கூறியும் "ஒப்பந்தப்படி செய்ய வேண்டும்" என்றே ஷைலக் பிடிவாதம் செய்தான். பெசானியோவின் முயற்சி வீணாயிற்று. அதற்குள் போர்ஷியாவும் சபையை அடைந்தாள். நீதிபதியைப் பார்த்து "நான் அந்தோனியோ கக்ஷியில் வாதிக்கவந்தேன்" என்று உரைத்தாள். நியாயாதிபதியும் இசைந்தார்.

வக்கீல் :—ஷைலக் ! அந்தோனியோ உனக்கு எவ்வளவு கொடுக்க வேண்டும் ?

ஷைலக் :—முப்பதாயிரம் பவுன் தரவேண்டும்.

வக்கீல் :—இப்பொழுது அவ்வளவையும் கொடுத்து விட்டால் பெற்றுக் கொள்ளச் சம்மதமா ?

ஷைலக் :—அஃது எப்படிமுடியும்! மூன்று மாதத் தவணைக்குள் கொடுத்திருந்தால், பெற்றுக் கொண்டே யிருப்பேன். இப்போது கொடுக்க வேண்டியது ஒரு பவுண்டு தசையே.

வக்கீல் :—அறுபது ஆயிரம் பவுன் கொடுத்தால் ?

ஷைலக் :—அது நியாயம் ஆகாது. ஒப்பந்தப்படி நடப்பதே நியாயம்.

வக்கீல் :—முப்பதாயிரத்தை விட நான்கு மடங்கு பவுன் நல்கினல் ?

ஷைலக் :—ஏற்பாடு அவ்விதம் இல்லேயே.

வக்கீல் :—எட்டு மடங்கு ஈந்தாலும் அப்படித் தானே ?

ஷைலக் :—எவ்வளவு இறுத்தாலும் என்னபயன் ? இசைந்து எழுதிக் கொடுத்ததைத் தானே நான் பெறவேண்டும் ?

வக்கீல் :—உமக்குவேண்டியது அவ்வுத்தமருடைய தசைதானே ?

ஷைலக் :—நான் சொல்லவில்லே ; உடன்படிக்கை அப்படி.

வக்கீல் :—ஆம், அது நியாயமே ; அதில் ஒன்றும் ஐயம் இல்லே ; அந்தோனியோ தசையை நீர் பெறவேண்டியவரே.

ஷைலக் :—பேஷ் ! ஐயா !! தாங்களே நீதிமான். உங்களே உலகம் புகழும்.

வக்கீலின் தீர்ப்பைக்கேட்ட அனேவரும் திடுக் கிட்டுத் திகில் அடைந்தனர். ஐயோ ! உபகாரி உயிருக்கு உறுகண் நேர்ந்ததே, என்றனர். நீதி பதியின் கண்ணிலும் நீர் வார்ந்தது.

வக்கீல்:—ஷைலக் ! ஏன் தாமதம் ? வாள் கொண்டு சதையை அறுத்துக்கொள்ளலாம்.

ஷைலக் :—இதோ (கையில் கத்தியைத் தாங்கி அந்தோனியோவின் அருகில் சென்றான்.)

வக்கீல் :—ஷைலக்! எழுதித் தந்த ஏற்பாடு யாது?

ஷைலக் :—இருதயத்திற்கு நேரே ஒரு பவுண்டு தசை அறுத்துக்கொள்ள வேண்டும்.

வக்கீல் :—ஆமாம்; அதை மறக்க வேண்டாம். ஆனால், அந்தோனியோ தேகத்தில் இருந்து ஒரு துளி ரத்தமும் வெளிப்படக்கூடாது என்பதைக் கவனித்துச் செய்யவேண்டும்.

என்ன செய்வான் ஷைலக்! இடி விழுந்தது போல் திடுக்கிட்டான். அவனையும் அறியாமல் அவன் மனம் துயரம் கொண்டது. ஆனாலும், அங்கிருந்த அனைவரும் அகம் மகிழ்ந்தனர். ஷைலக் வழிக்குத் திரும்பினான். முப்பதாயிரம் பவுன் கொடுத்தாலும் பெற்றுக் கொள்வதாக வணக்கத்தோடும், வாய் திறந்து கெஞ்சினான். பயன்படவில்லை. அந்தோனியோவைக் கொல்ல வேண்டும் என்று செய்த வஞ்சகத்தின் பயனாக 'ஷைலக் செல்வம் முழுதும் அந்தோனியோவுக்கே சேரவேண்டும்' எனத் தீர்ப்பு ஏற்பட்டது. ஷைலக் சஞ்சலத்துடன் சென்றான். மரண நிலையில் இருந்த அந்தோனியோவும் மற்றையோரும் மகிழ்ந்து திரும்பினார்கள். உபகாரம் வீண்போகாமல் உதவிற்று அல்லவா.



## 13. கம்பர்.

சிறுவர்களே! "கல்வியில் பெரியவர் கம்பர்" என்னும் பழமொழியை நீங்கள் கேட்டிருப்பீர்கள். கம்பர் வீட்டுக் கட்டுத்தறியும் கவி பாடும் என்னும் முதுமொழியும் உண்டு. இதனால், உங்களுக்கு என்ன தெரிகிறது? கல்வியில் பெரியவரும், கவி பாடுவதில் மிகச் சமர்த்தருமாக ஒருவர் இருந்தார்; அவர் பெயர் கம்பர் என்று தெரிகிறது. ஏதாவது ஒரு விஷயத்தைப்பற்றி நெடுநேரம் பேசினால், இது என்ன கம்பராமாயணமாய் இருக்கிறதே! என்றும், ஒருவன் ஏதாவது ஒரு காரியத்தைச் செய்ய முடியாது என்றால் மற்றவன் "அது என்ன கம்பர் சூத்திரமா?" என்றும் இசைப்பது வழக்கம். இவற்றால், கம்பர் செய்த ராமாயணக் கதை பெரியது என்றும், அவர் செய்த நூல்போல் எவராலும் செய்ய முடியாது என்றும் அறிகிறோம்.

இவ்வளவு இசையுற்ற கம்பர் வரலாற்றை நாம் அறிந்துகொள்ள வேண்டியது அவசியந்தானே. சோழநாட்டுத் திருவழுந்தூரில் ஆதித்தர் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் உவச்சர் குலத்திற் பிறந்தவர். அம்மன் கோயில் பூசாரியாய் இருந்தாரென்றும் தெரிகிறது. அவருடைய அருமைப் புதல்வரே கம்பர். அக்காலத்தில் திருவெண்ணெய்நல்லூரில் சடையப்ப முதலியார் என்னும் வள்ளல் ஒருவர் வாழ்ந்தார். நமது கம்பர், இளமையிலேயே வள்

ளலே அடுத்தார். அம்முதலியாரும் கம்பரை அக மகிழ்ச்சியோடு ஆதரித்து வந்தார்.

இளமையிலேயே கம்பர் கலைமாதின் திருவருள் பெற்றவர். இயற்கையாக, இனியபாடல்களை இயற்று வார். நாளடைவில் கம்பரின் கவித்திறமை கனப்பட்டது. அதைக்கண்ட வள்ளல் "இராம சரித்திரத்தைப் பாடுக" என்று கம்பரைக் கேட் டார். கம்பருக்கும் காகுத்தன் கதையில் கனத்த ஆவல் இருந்தது. ஆகவே, அவர் இராமாயணம் இயற்றினர். புகழேந்தி, வெண்பா பாடுவதில் விளக்கமுற்றிருந்ததுபோல, இவர் விருத்தம் பாடுவ தில் வீறுபெற்றிருந்தார். ஆகையால் "விருத்தம் என்னும் ஒண்பாவிற்கு உயர் கம்பன் அல்லால் ஒருவர் பகர ஒண்ணுது" எனப் புகழ் பெற்றார். ராமாயணம் முழுதும் விருத்தப்பாக்களால் நிறைந் தது. கம்பருக்கு 'கவிச்சக்கரவர்த்தி' என்ற சிறப் புப் பெயரும் உண்டு.

கவிச் சக்கரவர்த்தியாகிய கம்பர் சிறிதும் செருக்கு இல்லாதவர். அவர் ராமாயணத்தில்

"ஓசை பெற்றுஉயர் பால்கடல் உற்று ஒரு
பூசை முற்றவும் நக்குபு புக்குஎன
ஆசைபற்றி அறையல் உற்றேன் மற்றுஇக்
காசுஇல் கொற்றத்து இராமன் கதை அரோ."

என்றும்,

"அறையும் ஆடு அரங்கும் மடப்பிள்ளைகள்
தரையில் கீறிடில் தச்சரும் காய்வரோ
இறையும் ஞானம் இல்லாத என் புன்கவி
முறையில் நூல் உணர்ந்தாரும் முனிவரோ"

என்றும் அவையடக்கம் கூறுகின்றார்.

கம்பர், தமக்குப் பிறர் செய்த நன்றியைச் சிறிதும் மறவாதவர். அவர், ஒருமுறை சோழ தேசத்தில் இருந்து வெளியேறினர். செல்லுங்கால், வழியில் பசி நோய் உண்டாயிற்று. ஒரு செட்டியிடம் சென்று, "பசிக்கு ஏதாவது கொஞ்சம் பண்டம் தாரும்" என்றார். அவன் கொடுக்கவில்லை. வாணியன் ஒருவனை அண்மி, சிறிது பிண்ணாக்கு யாசித்தார். அவனும் அளிக்கவில்லை. முடிவில் மறையவன் மனைக்குச் சென்றார். உண்ணும் தண்ணீர் கேட்டார். மறையவனுக்கும் மனம் இளகவில்லை. மிகுந்த களைப்பு எய்திய அவர், ஒரு மரநிழலிற் படுத்தார். அருந்துவதற்கு அம்மர நிழலை அடைந்த வேளாளன் ஒருவன், கம்பரது கடும்பசியைக் களைந்தான். அப்போது அவர்,

"செட்டிமக்கள் வாசல்வழிச் செல்லோமே செக்காரப்
பொட்டிமக்கள் வாசல்வழிப் போகோமே,—முட்டிபுகும்
பார்ப்பார் அகத்தை எட்டிப் பாரோமே, எந்நாளும்
காப்பாரே வேளாளர் காண்"

என்று பாடினர்.

அவர், தன்னை ஆதரித்த சடையப்ப வள்ளலைப் புகழ்ந்து, ராமாயணத்தின் இடையில், பலவிடங்களில் பாடியிருக்கிறார்.

கம்பர், இராமாயணத்தில் சிறிது பாகத்தைத் திருவெண்ணெய்நல்லூரில் இருந்துகொண்டும், மற்றதைத் திருவொற்றியூரில் வசித்துக்கொண்டும் பாடிமுடித்தார். அச்சிறந்த நூலைத் திருவரங்கர் க்ஷேத்திரத்தில் அரங்கேற்றினார். இவர், ஏரெழுபது, திருக்கைவழக்கம் என்னும் இரு சிறு நூல்களும் இயற்றினார். 'சரசுவதி அந்தாதியும் கம்பர் இயற்றியதே' என்று சிலர் கூறுவர். ஏரெழுபதில் வேளாளர் சிறப்பை அறிவிக்கும் ஒரு செய்யுளை இங்கே கூறுவோம் :

" தொழும் குலத்தில் பிறந்தால் என்?
சுடர்முடி மன்னவர் ஆகி
எழும் குலத்தில் பிறந்தால் என்?
இவர்க்குப் பின் வணிகர் எனும்
செழும் குலத்தில் பிறந்தால் என்?
சிறப்பு உடையார் ஆனல் என்?
உழும் குலத்தில் பிறந்தாரே
உலகு உய்யப் பிறந்தாரே.



## 14. மதுபான மயக்கம்

முன் ஒரு பாடத்தில், தேனுக்கு மது என்று பெயர் உண்டு என்பதைத் தெரிந்து கொண்டோம். மது என்பதற்குக் கள் என்றும் அர்த்தம். கள் என்பது தென்னை, பனை, ஈந்து முதலிய மரங்களின் பாளையில் இருந்து இறக்கப்படும் ரசமே. அதைக் குடித்தால் மயக்கம் ஏற்படும். அப்பொழுது நாம் யார்? நம்முடைய நிலை யாது? நாம் எங்கே இருக்கிறோம்? யாது செய்கிறோம்? பகலா? இரவா?



என்னும் யோசனையே உண்டாகாது. யாருடன் பேசுகின்றோம்? என்ன பேசுகின்றோம்? என்னும் அறிவு இல்லாமல் வாயில் வந்தபடி பேச நேரும். கள்ளைக்குடித்து விட்டுக் கதறி அழுகிறவர்களையும், மகிழ்ந்து, மட்டு இன்றிச் சிரித்துக் குதிப்பவர்களையும் நாம் கண்டிருக்கிறோம்.

குடித்தவனை வெறி கொண்டவன்போல் ஆக்கி விடுவதால், கள்ளுக்கே வெறி என்று பெயர். பானம் செய்தவன் கவனம் மறக்குமாறு செய்வதால், அதற்கு மறவி என்று நாமம். ஒரு வகைச் சாதியார் அதைக் குழுவுக்குறியாகச் சொல் விளம்பி என்பர். ஏன்? குடித்தவுடனே தாறுமாறான சொல்லை விளம்பச் செய்வது ஆகையால் அப்படி அறைகின்றனர். கட்குடித்தவன், ஒரு நிலையான எண்ணம் இன்றி வேளைக்கு ஒருவிதமாகப் பேசுவான். அதுபற்றியே "கள் குடித்தவன் பேச்சு பொழுது புலர்ந்தால் போச்சு" என்னும் பண்டை மொழி வழங்குகின்றது. இவ்வளவுதானா! குடியினால் தேகசுகமும் கெடுகிறது. அதையும் விவரிப்போம்.

புளிப்பு ஏறிய பொருள்களில் மதுசாரம் உண்டாகிறது. அதுவே மயக்கஞ் செய்கிறது. அம் மதுசாரம், தேகவளர்ச்சியைக் கெடுக்கும் ஒரு வகைவி ஷப்பொருள். சிலர், தாகம் தணிவதன் பொருட்டு மதுவை அருந்துவர். அது மூடக் கொள்கையே. மதுசாரத்திற்கு நீரை வரளச் செய்யும் சக்தி அதிகம். மதுவை அருந்துவதனால், தாகம் மிகுமே அல்லாமல் தணியாது. அக்காரணத் தாலேயே கால்படி நீர் அருந்தவும் சக்தி இல்லாதவன், கள் குடிக்கப் பழகின பின்பு, பலபடி கள்ளைக் குடித்து விடுகின்றான். மதுசாரம் எவ்வளவுக்கு எவ்வளவு ரத்தத்துடன் கலக்கமோ, அவ்வளவுக்கு அவ்வளவு ரத்தத்தில் உள்ள நீர் சுண்டிவிடும்.

மது சாரத்திற்கு மற்றும் ஒரு தீயகுணம் உண்டு. அதாவது அன்னப் பையைக் கெடுத்து ஜீரண நீர் சுரக்காதபடி செய்துவிடும். அதனால், குடலில் ஜீரணகாரியம் நடவாமல் தடை ஏற்படும். குடித்தவனுடைய மூளையும் நரம்புகளும் நன்கு உழைக்கும் சக்தியை இழக்கின்றன. சிலர், குடித்தால் மூளை மிக உற்சாகத்துடன் வேலை செய்யும் என நம்புகின்றனர். அவர்கள் அறிவீனத்தை எண்ணிப் பாருங்கள். குடியால், குளிர் நீங்கும் என்றுகருதுகிறவர்களும்உண்டு. அக்கருத்தும்பிசகு தான். குடிக்கிறவன் வியாதியடைந்தால் விரைவில் குணம் அடைய முடியாது. ஏன் என்றால், ரத்தத்தில் உள்ள வெண்மையான அணுக்கள் அல்லவா ரத்தத்தில் பரவும் வியாதிக்கிருமிகளை வெளியில் ஓட்டுகின்றன. மதுசாரம் ரத்தத்தோடு சேர்ந்தபோது வெள்ளை அணுக்கள் பலக்குறைவு அடைகின்றன. விஷக்கிருமிகளுக்குத் தோற்று விலகிவிடுகின்றன. ஆதலால், விஷக்கிருமிகள் தேகத்தில் பரவி, சந்தோஷமாக சஞ்சரிக்கின்றன.

இம்மட்டுமா ! ஏழைக் கூலியாளன் ஒருவன் குடிக்கப் பழகிவிட்டால் அவன் படும் பாடு கொஞ்சமா ! தினம் கிடைக்கும் கூலியைக் கொண்டுபோய் மதுக்கடைக்குச் செலுத்திவிடுகின்றான். வீட்டில் உள்ள மனைவிமக்கள் பட்டினிகிடந்து பரிதபிக்கின்றனர். அவனும் நாளடைவில் பலஈனம் அடைகின்றான். வேலைசெய்ய வீரம் இன்றி அசக்தன் ஆவான். உழைக்காவிடில் ஊதியம் கிடைக்குமா ?






பிறகு குடிக்கவும் பணம் இல்லாமல் போகும். குடியின்மீது உள்ள ஆசையால் வீடு நுழைந்து திருடுவான்; வழிபறிப்பான்; கொலை செய்வான்; இக்கொடிய காரியங்களுக்குத் தகுந்த தண்டனையும் அடைவான்.

செல்வம் உள்ளவர்கள் குடிக்கத் துவக்கினலோ! சொத்துக்கள் எல்லாவற்றையும் தோற்றுச் சோற்றுக்கும் இன்றி அலைகிறார்கள். முடிவில் அவர்கள்

"பல்எலாம் தெரியக்காட்டிப்
பருவரல் முகத்தில் கூட்டிச்
சொல்எலாம் சொல்லி நாட்டித்
துணைக்கரம் விரித்து நீட்டி
மல்எலாம் அகல ஓட்டி
மானம் என்பதனை வீட்டி
இல்எலாம்" இரந்து உண்டு
இழிவினை அடைவர் அந்தோ!





## 15. கடவுள் செயல்

சோடாய் மரத்தினில் புரு இரண்டு இருந்திடத்
துறவு கண்டே, வேடுவன்
தோலாமல்அவை எய்யவேண்டும்என்று,ஒருகணை
தொடுத்துவில் வாங்கி நிற்க,
ஊடாடி மேலே எழும்பிடில் அடிப்பதற்கு
உலவு ராஜாளி கூட

உயரப் பறந்து கொண்டேதிரிய, அப்போது
உதைத்தசிலை வேடன் அடியில்
சேடாக வல்விடம் தீண்டவே, அவன்விழச்
சிலையில் தொடுத்த வாளி
சென்று ராஜாளிமெய் தைத்துவிழ, அவ்விரு
சிறைப்புறு வாழ்ந்த அன்றோ ?
வாடாமல் இவையெலாம் சிவன்செயல்கள் அல்லாது
மனச் செயலினாலும் வருமோ ? [என்
மயில்ஏறி விளையாடு குகனே ! புல்வயல்நீடு
மலைமேவும் குமரேசனே !

(குருபாத தாசர்)



## 16. பாம்பு.



உலகில் பல ஜீவராசிகள் வாழ்கின்றன. அவற்றுள், விஷமுடையவை பல. அவற்றுள்ளும் மர

ணத்தை உண்டாக்கக் கூடியவை பாம்புகள். பாம்பின் உருவம் ஒரு தாம்பை ஒத்திருக்கும். அதற்குக் காலாவது, கையாவது உண்டா? இல்லை. ஆனாலும், கயிறுபோல் நீண்டுள்ள அதன் தேகத்தில் மூன்று பிரிவுகள் உண்டு. அவை தலை, உடல், வால் என்பன. தலையில் மூக்கு, வாய், கண்கள் முதலியவை அமைந்துள்ளன. ஒவ்வொரு கண்ணின் அருகிலும் ஒரு ஜவ்வு உண்டு. அதைச் செதில் மறைத்துக் கொண்டிருக்கிறது. ஜவ்வே பாம்புக்குக் காது. அது சிறிய ஓசையையும் கேட்டு அறியும். வாயில் பற்களும் நாக்கும் அமைந்துள்ளன. பாம்புகளுக்கெல்லாம் பெரும்பாலும் பிளவுபட்ட நாக்கே உண்டு என்னலாம். பாம்புக்கு நாக்கு தொட்டு அறியும் கருவியாக உதவுகின்றது.

அரவுகளில், சிலவற்றின் உடல்மீது புள்ளிகள் உண்டு. பட்டைகளோ, கோடுகளோ அமையப் பெற்றனவும் உள. அவைகள், தன் உடலின் மேலுள்ள தோலை உரித்துவிடும் சக்தி உடையன. வாலின் முனை போகப் போகச் சிறுத்திருக்கும். சர்ப்பத்தில் பலவகை உண்டு. அவற்றுள் சில விஷமுள்ளவை. விஷமில்லாதன சில. நஞ்சுள்ள பணிகள் நாகம், கருநாகம், விரியன், கட்டுவிரியன், பச்சைப்பாம்பு, சுருட்டை, கொம்பேறிமூக்கன் முதலியன. இவற்றுள்ளும் பச்சை, சுருட்டை, கொம்பேறி ஆகிய மூன்றும் கடித்தால் அதிக ஆபத்து இல்லை. மற்றவை தீண்டினால் பிழைப்பது அருமை.

சாரைப்பாம்பு, மலைப்பாம்பு, கேசவன்குட்டி, சங்குவிரியன், நீர்ப்பாம்பு, மண்ணுளி, முதலியன நஞ்சு இல்லன. கேசவன் குட்டியைப் புல்லுருவி என்றும், சங்குவிரியனைச் சுவர் ஏறி என்றும் இசைத்தல் உண்டு.

பாம்புக்குக் கால் இல்லை. ஆனாலும், ஊர்ந்து செல்லும். அதற்குச் சாதகமாக மார்பில் செதில்கள் அமைந்துள்ளன. ஒரு பாந்தளுக்கு இருநூற்று ஐம்பது முதல், முந்நூறு செதில்கள் வரையில் உண்டு. அச்செதில்களின் உதவியால், பன்னகங்கள் பரிமாவைக்காட்டிலும் வேகமாக ஓடுகின்றன; மரத்தின்மேலும் ஏறுகின்றன; நீரிலும் நீஞ்சுகின்றன. உரகங்கட்கு உணவு ஓணன், பல்லி, எலி சிறுபறவை, தவளை, மீன் முதலியனவே. பெரிய மாசுணம் விலங்குகளையும், மனிதர்களையும் விழுங்கும். நஞ்சுடைய நாகங்களுக்கும், விஷம் இல்லாத வியாளங்களுக்கும் பல்லில் பேதம் உண்டு. ஆலம் இல்லா அங்கதங்களின் மேல் வாயில் இரு வரிசைப் பற்களும், கீழ்வாயில் ஒரே வரிசைப் பற்களும் உள. பற்களனைத்தும் உட்புறம் வளைந்தவை. ஆலம் உடைய அரவுகளுக்கு, மேல் வாயிலும் ஒரே வரிசைப் பற்கள் தான் உண்டு. ஆனால், மேல் வாயில் இரு பெரிய பற்கள் உள. அவைகளே நச்சுப் பற்கள்.

நச்சுப் பற்கள் ஒவ்வொன்றின் நடுவிலும் சிறிய துவாரம் ஒன்று இருக்கின்றது. பாந்தளின் இரு கன்னங்களிலும் பக்கத்திற்கு ஒன்ருக இரு

நச்சுப்பைகள் அமைந்திருக்கின்றன. இரு பைகளில் இருந்தும் இரண்டு குழாய்கள் வந்து இரு நச்சுப் பற்களில் பொருந்துகின்றன. பையிலுள்ள காளம் அக்குழாயின் மூலம் பல்லுக்கு வரும். பல்லில் உள்ள துவாரத்தின் வழியாகக் கடிவாயில் இறங்கும். பாந்தள் தன் வாயைத்திறக்கும்போது நச்சு எயிறுகள் நேராக நிற்கின்றன. வாயை மூடும் பொழுது அத்தசனங்கள் உட்புறமாக அடியோடு மடிந்து மேல் வாயில் படிந்துவிடுகின்றன. பாம்பு, வாயை அகற்றும்போதுதான் விஷநீர் குழலின் வழியாகக் கசியும். ஒவ்வொரு உரகத்திற்கும் இரண்டு மூன்று ஜோடி நச்சுத் தசனங்கள் உள. அவற்றுள் ஒரு ஜோடியே மிகப் பெரியது. பெரிய எயிறுகள், ஏதாவது ஒரு காரணத்தால் முரிந்துவிட்டால் அதற்கு அடுத்துள்ள ஒரு ஜோடி உபயோகப் படும்.

பணிகள் அனைத்தும் பெரும்பாலும் முட்டை இட்டுக் குஞ்சு பொரிக்கின்றன. பாம்பு தடவைக்குக் குறைந்தது எட்டு முட்டைகளாவது இடும். அம் முட்டைகள் ஒன்றோடு ஒன்று கோத்ததுபோல் மெல்லிய தோலால் இணைக்கப்பட்டிருக்கின்றன. அகி, குப்பை மேடுகளிலும், வைக்கோல் போர்களிலும், எருமுட்டைக் குவியல்களிலும் முட்டை இடும். முட்டைகள் உஷ்ணம் அடைவதற்காகவே அது அவ்வாறு செய்கின்றது. ஆனால், விரியன் என்னும் ஓரினப் பாம்பும், கடலில் உள்ள வளக்கடியன் என்கிற ஒருவகை உரகமும் முட்டை இடுவதில்லை.

குட்டிகளையே ஈனுகின்றன. அவை ஒரு தடவைக்கு ஐம்பது அல்லது அறுவது குட்டிகளைப் பெறுகின்றன.

இவற்றுள், நாகத்தை 'நல்ல பாம்பு' என்றும், 'மூர்க்கன், என்றும் சொல்லுவது உண்டு. அதற்கு ஒரு விசேஷ சக்தி அமைந்திருக்கின்றது. தன் தலையை மேலே தூக்கி அகலமாக விரிக்கும். அவ் விதம் செய்வதைப் படம் எடுக்கிறது என்போம். அப்படத்திற்கு 'பணம்' என்றும் 'பை' என்றும் பெயர். ஆதலால், 'பைந்நாகம்' எனப்படுகிறது. அந்தப்படம், பார்வைக்கு அழகாயும், பயத்தை உண்டுபண்ணக் கூடியதாயும் இருக்கும். அதன் உட்புறத்தில் பக்கத்திற்கு ஒன்ருக இரு வட்டமான சுழிகள் உள. அவை இரண்டையும் ஒரு வளைவான



கோட்டின் இருமுனைகளும் தொடுகின்றன. இங்கே உள்ள பாம்பின் படத்தைப் பாருங்கள். பாம்பைக்

கண்டால் படையும் நடுங்கும். அது விஷமுள்ள தாயினும், இல்லதாயினும் விலகி இருப்பதே நலம்.

"நஞ்சு உடைமைதான் அறிந்து நாகம் கரந்து உறையும்
அஞ்சாப் புறம்கிடக்கும் நீர்ப்பாம்பு"

பாம்புக்குப் பகை கருடன்



## 17. தொகைப்பொருள்கள்

இருசுடர் - சூரியன், சந்திரன்.
இருவினை - நல்வினை, தீவினை.
இருமரபு - தாய் மரபு, தந்தை மரபு.
இருகந்தம் - நற்கந்தம், துர்க்கந்தம்.
முப்பழம் - வாழைப்பழம், மாம்பழம், பலாப்பழம்.
முப்பொறி - மனம், வாக்கு, காயம்.
முக்காலம் - இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம்.
மும்மூர்த்தி - பிரம்மா, விஷ்ணு, உருத்திரன்.
முத்தொழில் - படைத்தல், காத்தல், அழித்தல்.
மூவிடம் - தன்மை, முன்னிலை, படர்க்கை.
முச்சுடர் - சந்திரன், சூரியன், அக்கினி.
முக்கடுகம் - சுக்கு, மிளகு, திப்பிலி.
முத்தமிழ் - இயல்தமிழ், இசைத்தமிழ், நாடகத் தமிழ்.
முப்புரம் - பொன்மதில், வெள்ளிமதில், இருப்பு மதில்.
நானிலம் - முல்லைநிலம், குறிஞ்சிநிலம், நெய்தல் நிலம், மருதநிலம்.

நாற்கதி - தேவகதி, மனிதகதி, விலங்குகதி, நரக கதி.

நாலங்கம் - தேர்ப்படை, யானைப்படை, குதிரைப் படை, காலாட்படை.

நால்வேதம் - ரிக்வேதம், யசுர்வேதம், சாமவேதம், அதர்வவேதம்.

நாற்பொருள் - அறம், பொருள், இன்பம், வீடு.

நாலரண் - காட்டு அரண், மலை அரண், நீர் அரண், மதில் அரண்.

நாற்குணம் (ஆடவர்க்கு) - அறிவு, நிறை, ஓர்ப்பு, கடைப்பிடி.

நாற்குணம் (பெண்டிர்க்கு) - நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு.

நாற்பொன் - சாதரூபம், கிளிச்சிறை, ஆடகம், சாம்பூநதம்.

நாற்பூ - கொடிப்பூ, கோட்டுப்பூ, நீர்ப்பூ, புதற்பூ.

நாலுணவு - உண்பன, தின்பன, நக்குவன, பருகுவன.

நாலுபாயம் - சாமம், தானம், பேதம், தண்டம்.

ஐந்து பட்சி - வல்லூறு, ஆந்தை, காகம், கோழி, மயில்.

ஐந்திணை - குறிஞ்சித்திணை, முல்லைத்திணை, பாலைத் திணை, நெய்தல்திணை, மருதத்திணை.

ஐந்துவாசம் - ஏலம், தக்கோலம், இலவங்கம், சாதிக் காய், கர்ப்பூரம்.

ஐங்குரவர் - அரசன், உபாத்தியாயன், தாய், தந்தை, தமையன்.

ஐம்பால் - ஆண்பால், பெண்பால், பலர்பால், ஒன்றன்பால், பலவின்பால்.

ஐந்து அங்கம் (பஞ்சாங்கம்) - திதி, வாரம், நக்ஷத்திரம், யோகம், கரணம்.

ஐந்து பாதகம் - கொலை, களவு, பொய், கள்ளுண்ணல், குருநிந்தை.

ஐந்து உணவு - கடித்தல், நக்கல், பருகல், விழுங்கல், சுவைத்தல்.

ஐம்பூதம் - நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம்.

ஐந்து தாய்மார் - பாராட்டும் தாய், ஊட்டும் தாய், பால்கொடுக்கும் தாய், கைத்தாய், செவிலித் தாய்.

ஐந்து தொழில் - எண்ணல், எழுதல், இலைகிள்ளல், மலர்தொடுத்தல், யாழ்வாசித்தல்.

காட்டில் கிடைக்கும் ஐம்பொருள் - அரக்கு, இருல், தேன், மயில்பீலி, நாவி.

கடலில் கிடைக்கும் ஐம்பொருள் - உப்பு, பவளம், முத்து, சங்கு, ஓர்க்கோலை.

நாட்டில் கிடைக்கும் ஐம்பொருள் - செந்நெல், செவ்விளநீர், சிறுபயறு, வாழை, கரும்பு.

நகரில் கிடைக்கும் ஐம்பொருள் - கண்ணடி, பித்தன், கருங்குரங்கு, யானை, அரசன்.

மலையில் கிடைக்கும் ஐம்பொருள் - மிளகு, கோட்டம், அகில், தக்கோலம், குங்குமப்பூ.

ஐம்பொறி - மெய், வாய், கண், மூக்கு, செவி.

ஐம்புலன் - ஊறு, சுவை, ஒளி, நாற்றம், ஓசை.



## 18. தங்கம்

தங்கம் என்பது ஒரு உலோகம். அது, பூமியில் இருந்து வெட்டி எடுக்கப்படுகிறது. உலோகங்கள் எல்லாவற்றுள்ளும் தங்கமே உயர்ந்தது. அது, மிக நயமும் பிரகாசமும் உடையது. இதுபற்றியே நல்ல குணம் உடைய ஒருவனைப் பார்த்து “அவன் குணம் பத்தரை மாற்றுத் தங்கம்” என்கிறோம். உயர்ந்த பொருள்களைப் பார்த்து “இது தங்கக் கட்டி ஆயிற்றே” என்பதும் வழக்கம். கலப்பு இல்லாத, அசல் தங்கமே பத்தரை மாற்றுத் தங்கம். அது மஞ்சளைப் பிளந்ததுபோல் இருக்கும்.

தங்கத்தை மிக இலேசான தகடாகத் தட்டலாம். மெல்லிய கம்பியாக இழுக்கலாம். ஒரு அங்குல உயரத்தில் இரண்டு லக்ஷத்து எண்பத்து இரண்டாயிரம் தகடுகள் அடங்குமாறு மெல்லிய தகடுகளாக்கலாம். ஒரு குன்றிமணி அளவு தங்கத்தை ஐம்பது சதுர அங்குல அகலமான தகடாகத் தட்டலாம். ஒரு நெல் எடை உள்ள தங்கத்தை ஐந்நூறு அடி நீளக் கம்பியாக நீட்டலாம். சில கனிகளில் தங்கம் சுயமாகவே கிடைக்கின்றது. தங்கம் நயமாய் இருப்

பதனுல், சரிகையும் செய்வார்கள். தங்கச் சரிகையும் பட்டும் கலந்து நெய்த வஸ்திரத்திற்குப் பீதாம்பரம் என்று பெயர். (பீதம் - பொன், அம்பரம் - வஸ்திரம்)

சுத்தமான தங்கத்தோடு சிறிது செம்பு சேர்த்தால் பொன் எனப்படும். பொன், சிவந்த நிறமுடையது. ஆகையால், அதைச் செம்பொன் என்பது மரபு. செம்பொன்னுல், 'பவுன்' அல்லது 'சவரன்' எனச் சொல்லும் இங்கிலீஷ் நாணயம் செய்கிருர்கள். அதில் இருபத்திரண்டு பங்கு பொன்னும் இரண்டு பாகம் செம்பும் சேர்க்கிருர்கள். அதை இருபத்திரண்டு காரட் தங்கம் என்போம். அந்த இரண்டு பாகம் செம்புகலவா விட்டால் சுத்தமான தங்கம் அன்ருே, அது இருபத்துநான்கு காரட் தங்கம். தங்கத்திற்காவது, பொன்னுக்காவது துருப்பிடிக்கும் தன்மை இல்லை. ஆயினும், பொன் தன் ஒளியில் சிறிது மழுங்கும்இயல்பு உடையது. சுரங்கங்களில் இருந்து தங்கம் கொஞ்சமே கிடைப்பதனுலும், அதற்கும் மிகுந்தசெலவு ஆகின்றதனுலும் அதன் விலை அதிகமாகின்றது.

பொன், காலிபோர்னியா, ஆஸ்திரேலியா, ரஷ்யா, ப்ரேஜில், நியூஜிலந்து முதலிய இடங்களில் கிடைக்கின்றது. ஒரு வருஷத்தில் காலிபோர்னியாவிலும், ஆஸ்திரேலியாவிலும் மாத்திரம் முப்பது கோடி ரூபாய் மதிப்புள்ள பொன் எடுக்கின்ருர்கள் எனத் தெரிகிறது. மைசூர் ராஜ்யத்தில் கோலார்

என்னும் இடத்தில் ஓர் பொன் கனி உண்டு. அனந்த புரம் ஜில்லாவிலும் மூன்று உள்ளன. ஆனால். அவற்றில் அதிகம் கிடைப்பதில்லை. சென்னை ராஜ தானியில் மேற்குத் தொடர்ச்சி மலையிலும், கிழக்குத் தொடர்ச்சி மலையிலும், பொன் சுரங்கங்கள் இருப்ப தாகக் கண்டு பிடித்திருக்கின்றார்கள். இன்னும் வெட்டி எடுக்க ஆரம்பம் செய்யவில்லை.

சில நதிகளில் உள்ள மணலோடு பொன் தூள் கலந்திருப்பதும் உண்டு. அந்த மணலை வாரித் தண்ணீரில் அரித்துப் பொன் வேறு, மணல் வேறா கப் பிரிப்பார்கள். அத்தொழிலைச் செய்கிறவர் களுக்கு 'அரிப்புக்காரர்' என்று பெயர். பொன் மண்ணில் கலந்திருந்து எடுபட்டாலும் அதன் பெருமை குறைகிறதா? இல்லையே. என்? அதன் இடத்தில் உள்ள நயமும் ஒளியுமே அதைச் சிறப் பிக்கின்றன. இதனால், கீழான ஜாதியில் பிறந்த வர்களும் குணத்தால் பெருமை அடைவார்கள் என்று அறிகிறோம் அன்றோ! பொன்னின் அழ கைக் கண்டே பலரும் பணிகள் செய்து அணிகி றார்கள்.



## 19. அரிச்சந்திரன்—I.

அநேக ஆண்டுகளுக்கு முன் கோசல நாட்டை அரிச்சந்திரன் என்பவன் ஆண்டிருந்தான். அவன் சூரிய குலத்தைச் சேர்ந்தவன். கோசல நாட்டுக் குத் தலைநகர் அயோத்தி. அயோத்தி மன்னனாகிய

அரிச்சந்திரன், தன் குடிகளை அன்பாகப் பரிபாலித்து வந்தான். தன் பிரஜைகளுக்கு வந்த துன்பத்தைத் தன்னுடையதாகக் கருதுவான். அவனிடம் வரும் வழக்குகளைத் தீர விசாரித்து முடிவு செய்வான். தன் பந்துக்களாயினும், குற்றம் செய்தால் தண்டிப்பான். அவன், மறந்தும் பொய் பேசினதில்லை. ஆதலால், மற்ற மன்னர்களைக் காட்டிலும் அயோத்தி அரசனே பெரும்புகழ் பெற்றிருந்தான். குலத்தாலும் குணத்தாலும் சிறந்த அச் செங்கோல் வேந்தன், வீரமும், அழகும் ஒருங்கே கொண்டிருந்தான். அந்நிருபன் புகழ் நிலஉலகம் முற்றிலும் பரவி நிலைத்திருந்தது.

அதே காலத்தில், கன்னோசி நாட்டைச் சந்திரதயன் ஆட்சி புரிந்திருந்தான். அவனுக்கு ராஜதானி கன்னமாபுரி. அக்காவலனுக்கு மகள் ஒருத்தி இருந்தாள். அப்பெண்ணின் பெயர் சந்திரமதி. அவளும் கரிசற்ற காரிகையுடன் திகழ்ந்தாள். மணப் பருவமும் அவளை அணுகிற்று. அதை அறிந்த அவனிபர் பலர் மதிதயனை அண்மி மணம் பேசினர். சந்திரமதியின் தந்தை அவர்கட்கெல்லாம் தக்க முடிவு கூறுமலே அனுப்பிக் கொண்டிருந்தான். அப்படி அவன் செய்ததற்கு ஒரு காரணம் உண்டு. அஃது என்னவென்றால், சந்திரமதி பிறந்தபோது “ அவள் கழுத்தில் ஒரு பொன் தாலி இருக்கிறது ; அது கண்ணடியால் பார்த்தால் அவளுக்குத் தெரியும். அவளும் கரத்தினல் பற்ற முடியாது. அது எவன் கண்ணுக்குத் தோன்றுமோ அவனே அவளுக்குக் கண

வன். வேறு எவர் கண்ணுக்கும் அது புலப்ப டாது." என அசரீரி வாக்கு உண்டாயிற்று. அவ் விதம் சில நாட்கள் கழிந்த பின்பு, சந்திரதயன் மக ளுக்குச் சுயம்வரம் நியமித்தான். மன்னர் பலருக் கும் செய்தி அனுப்பினன்.

சுயம்வர தினத்தில் காவலர் பலரும் கன்னேசி நகரத்தை அடைந்து கடிமணப் பந்தரில் கூடினர். அரிச்சந்திரனும் அங்கே வந்திருந்தான். சந்திரமதி, வேந்தர் அனைவரும் வியக்குமாறு கலியாண கோலம் பூண்டு காவணத்துள் நுழைந்தாள். தோழியர் வழக் கப்படி, அரசரது குலம் முதலியவற்றைக் கூறினர். சந்திரமதி, முறையாகக் கேட்டுக்கொண்டே அரிச் சந்திரன் அமர்ந்திருக்கும் இடத்தை அண்மினள். மன்னவன், மங்கையைக் கண்ணுற்றான். கழுத்தில் இருந்த தாலியைக் கண்டான். உடனே எழுந்து, மதிதயனை விளித்து ' சந்திரமதிக்கு முன்னமே மணம் நடந்துவிட்டது; அவள் கழுத்தில் தாலி அணிந்திருக் கிறாள்; மறுமுறை மணம் புரிவது தகாது' என்று கூறினன். அங்கு இருந்த அவனிபர் ஆச்சரியம் உற்றனர். 'அரிச்சந்திரனுக்கு அறிவு மயங்கி யதோ' என நினைத்தார்கள். கை கொட்டிக் 'கல்' என்று நகைத்தனர்.

சந்திரதயன், சபையைப் பார்த்துக் கை அமர்த்தி னன். அவையின் ஆரவாரம் அடங்கிற்று. பின் னர் "அயோத்தி மன்னன் அறைந்தது உண் மையே" என்று விவரமாகக் கழறினன். அரிச்சந்

திரனுக்கும் சந்திரமதிக்கும் அணிமணம் நடத்த நன்முகூர்த்தமும் குறித்தான். குறித்தகாலத்தில் குற்றமற்ற தம்பதிகள் இருவருக்கும் எழில்மணம் முடிந்தது. அக்கலியாணத்தில் ஏழை பணக்காரன், இளைஞர், அயலார், நட்பினர், பகைவர் என்கிற வேற்றுமை பாராட்டாமல் அனைவருக்கும் விருந்து நடத்தினர்கள். எல்லோரும் களிப்பு அடையுமாறு ஆடை, அணி முதலியவற்றைத் தந்தார்கள். சந்திரதயன், தன் தனையைக்குப் பொன் பூஷணம் முதலியன மிகுதியாகக் கொடுத்தான். அரிச்சந்திரன், தன் மாதுலன் இடத்தில் விடைபெற்று மனைவியை அழைத்துக்கொண்டு அயோத்திக்குச் சென்றான்.

சென்ற மன்னனும், அவன் மனைவியும் மிக ஒற்றுமையோடு இல்லறம் நடத்தினர். சந்திரமதி தன் மணாளன் மனக்குறிப்பை அறிந்து ஒழுகுவதில் திறமைவாய்ந்தவள். கணவன் சொல்லை மீறாது நடத்தலே தவமும், தருமமும் என அவள் கருதியிருந்தாள். கொழுநன் உண்ட பின்பே தான் புசிப்பாள். அவன் துயின்ற பிறகே அவள் துயிலுவாள். புருஷன் எழுவதற்குள் விழித்துக்கொள்வாள். பர்த்தாவுக்கு உற்ற இன்ப துன்பங்களைத் தனதாகக் கருதுவது அவள் வழக்கம். இவ்வாறு பூவும், மணமும்போல் பிரியாத மன ஒற்றுமையோடு வாழ்ந்த அவர்களுக்கு, ஓர் ஆண் குழந்தை உதித்தது, அப்பிள்ளைக்குத் தேவதாசன் எனப் பெயர் இட்டனர். மகவும் யாதொரு குறையும் இன்றி வளர்பிறைச்

சந்திரனேபோல் வளர்ந்துகொண்டிருந்தது. மன்னனும், மனேவியும் களிப்புடன் காலம் கழித்திருந்தனர்.



## 20. அரிச்சந்திரன்—II

ஒருநாள் தேவேந்திரன் தன் சபையில் இருந்தவர்களைப் பார்த்து "பூ உலக வேந்தர்களில் எல்லாவற்ருலும் ஏற்றம் பெற்றவன் எவன்?" என வினவினன். வசிஷ்டர் எழுந்து "அரிச்சந்திரனே யாருக்கும் மிகுந்தவன்" என்ருர். அருகில் இருந்த விசுவாமித்திரர், "தேவராஜனே! வசிஷ்டர் வார்த்தையை நம்பவேண்டாம். அந்த அரிச்சந்திரன் எவரினும் புல்லியன்." என்று கடுகடுத்துக் கூறினர். அதைச் செவி ஏற்ற வசிஷ்டர் "சரி; அரிச்சந்திரன் இடத்தில் எவர் ஆயினும் ஒரு குற்றம் கண்டு நிரூபித்து விட்டால், நான் கள் குடத்தைத் தலைமீது சுமந்து தெற்கே தனியாகச் செல்வேன்" எனச் சபதம் சாற்றினர். விசுவாமித்திரர் "நான் அரிச்சந்திரனிடம் பிழைகாட்டாவிடின் என் தவத்தில் பாதியை அவனுக்கு அளிப்பேன்" எனச் சூளுரை அறைந்தார். சபையும் கலைந்தது.

விசுவாமித்திரர், நேரே அயோத்தி அரசனிடம் வந்தார். "நான் ஒரு யாகம் செய்யவேண்டும்; அதற்குப் பொருள் தா" எனப் பெருந்தொகை கேட்டார். அம்மன்னன் அளிப்பதாகவே ஒப்புக்கொண்டான். ஆனல், முனிவர் அப்பொருளைப்

பின்னர் பெற்றுக்கொள்வதாகக் கூறிச் சென்ருர். சிறிது நாளைக்கெல்லாம், தன் யாகத்தில் ஒரு பன்றியை உண்டாக்கி "நீ சென்று அயோத்தியில் உள்ள பயிரை அழித்துவா" என்று ஏவினர். அதன்பொருட்டு வேட்டைக்குச் சென்ற வேந்தனைக் காடு, மலை முதலிய விடங்களில் அலையவும் செய்தார். அதன்பிறகு, இரண்டு பறைக்குலப் பெண்களை அனுப்பினர். அவர்களிடம் "நீங்கள் சென்று நிருபன் எதிரில் பாடி ஆடுங்கள்; அவன் அகமகிழ்ந்து "உங்களுக்கு யாது வேண்டும்?" என்பான்; நீங்கள் சந்திரவட்டக்குடையைக் கேளுங்கள்; அதைக் "கொடேன்" என்ருல், "எங்களை மணந்துகொள்ள வேண்டும்," எனச்சொல்லுங்கள். அதற்கும் இசையாவிடின், கோபம் வருமாறு இகழ்ந்து பேசுங்கள். அதற்குமேல் நடப்பதை என்னிடம் வந்து நவிலுங்கள்" என்று ஓதி அனுப்பினர். அவர்களும் அங்கே சென்று அவ்வாறே செய்தார்கள். அரையன், கோபித்து அவர்களை வெளியே விரட்டுமாறு கட்டளை இட்டான். அவர்கள் அழுதுகொண்டே ஓடிவந்து அருந்தவனிடம் அறைந்தனர். தவமுனி, சினங்கொண்டு வேந்தனிடம் சென்ருர். அவன் முனிவர் பாதத்தில் விழுந்து வணங்கினன். உடனே முனிவர் மன்னன் முடிமிசை உதைத்தார். உதைகொண்ட உத்தமன், 'சுவாமி தங்கள் பாதம் வலிக்குமே' என்று வருந்திக் காலைப்பற்றினன். அப்பொழுது முனிவர் 'நீ என்ன உபசாரம் புரிந்தாலும் செல்லாது. அப்பெண்களை மணந்துகொண்

டால் மன்னிப்பேன் " என்றார். அரசன், " சுவாமி! என் அரசாக்ஷியைக் கேட்டாலும் கொடுத்து விடுகிறேன். அப்பெண்களை விரும்பமாட்டேன் " எனப் பகர்ந்தான். அவ்வளவுதான் தாமதம். 'ஆனால், உன் ராஜ்யத்தைக் கொடு' என, அரசனும் நீர் வார்த்துத் தத்தம் செய்துவிட்டான்.



முனிவர், அரசாட்சியைப் பெற்றவுடன் " அரசே! நீ இனி இங்கு இருக்கக்கூடாது " என்று கூறிவிட்டார். அரிச்சந்திரன், மனைவியையும் மகனையும் அழைத்துக்கொண்டு வெளியே போகப் புறப்பட்டான். முனிவர், அவனை விளித்து, " முன்னே எனக்கு ஈவதாக வாக்குத்தந்த பொருளைக்கொடு " என்றார். " இன்னும் சில நாட்களில் கொடுக்கின்றேன் " எனக் கொற்றவன் கூறினன். அதற்காகச் சுக்கிரனைக் கோவுடன் கூட்டி அனுப்பினர்.

விசுவாமித்திரர், சுக்கிரனிடத்தில் "பணம் தரும் வரையில் பார்த்திபனை விட்டுப் பிரியாதே; ஒரு பொய் கூறிவிட்டால் பொருள் கொடுக்கவேண்டிய அவசியம் இல்லை என்று அறை; எனக்குச் சேர வேண்டிய பணத்தைக் கொடுத்துவிட்டால், உனக்குத் தரகு கேள்; அருந்த நல்ல உணவுகளையே அளிக்குமாறு அவஸ்தைப் படுத்து; எவ்விதமாவது அவன் வாயில் ஒரு பொய்யை வருவித்துவிடு" எனப் புகன்றனர்.

தரகனும் அவ்வாறே அவதிப்படுத்தினன். அரிச்சந்திரன், தன் மனைவி, மகனுடன் காட்டில் பட்ட கஷ்டத்திற்கு அளவே இல்லை. முடிவில் காசியை அடைந்து அங்கே வசிக்கும்ஒரு அந்தணனுக்குச் சந்திரமதியையும் தேவதாசனையும் விற்றான். அதனால் கிடைத்த பணத்தைக் கொண்டு முனிவர் கடனைத் தீர்த்தான். தரகன் தனக்குப் பொருள் வேண்டும் என்று கேட்கவே மன்னன், ஒரு புலையனுக்கு அடிமையாய் இருந்து பணம் வாங்கிப் பைசல் செய்தான். புலையனுக்கு அடிமைப்பட்ட புரவலன் சுடுகாடு காவல் புரிய நேர்ந்தது.



## 21. அரிச்சந்திரன்—III

அந்தணனுக்கு விலைப்பட்ட சந்திரமதி வீட்டு வேலைகளைச் செய்யவேண்டும். தேவதாசன், தினமும் காட்டிற்குச் சென்று தருப்பையும், சுள்ளியும் கொண்டுவரவேண்டும். தேவதாசன் வழக்கம்போல்

ஒருநாள் தருப்பை கிள்ளிக்கொண்டே இருந்தான். அப்போது ஒரு பாம்பு விசுவாமித்திரர் கட்டளையால் அவனைக் கடித்தது. உடனே தேவதாசன் உயிர் துறந்தான். அவனுடன் சென்றிருந்த அயல் வீட்டுச் சிறுவர்கள், மனம் வருந்திச் சென்று மாதாவுக்கு அறிவித்தனர். சந்திரமதி, ஐயரிடம் அனுமதி பெற்றுக்கொண்டு காட்டிற்கு வந்தாள். அவள் வருவதற்குள் இருட்டிவிட்டது. அவள், அக்கங்குலில் தன் மகனைத் தேடிக் கண்டுபிடித்தாள். காட்டில் தனியே கதறினள். சுடுவதற்கு எடுத்துச் சென்றாள். சுடுகாட்டில் சிதறிக்கிடந்த கொள்ளிக் கட்டைகளைப் பொறுக்கி, அடுக்கிப் பிள்ளையை அதன்மீது வைத்துக் கொளுத்தினள். எரிவதை அங்கே காவலாயிருந்த அரிச்சந்திரன் பார்த்தான். ஓடிவந்து "முழத்துண்டும், கால்பணமும், வாய்க்கரிசியும் கொடாமற் திருட்டுத்தனமாகக் கொளுத்துகிற நீ யார்?" என்று சீறிப் பிணத்தைக் காலால் உதைத்துத் தள்ளினன். அதைக்கண்டு சந்திரமதி துக்கித்தாள். அதனல், அவளை அரிச்சந்திரன் தெரிந்து கொண்டான். பிள்ளை இறந்ததைப் பற்றி இரங்கினன்.

பின்பு அரிச்சந்திரன், "சந்திரமதி! நீ சென்று அந்தணனைக் கேட்டு" முழத்துண்டும் கால்பணமும் வாங்கிவா. வாய்க்கரிசி எனக்குச் சேரும்; ஆதலால், அது வேண்டாம்" என்றான். சந்திரமதி அவ்விருளிலேயே திரும்பிச் சென்றாள். அப்பொழுது சில திருடர்கள், காசிராஜன் பிள்ளையைக் கொன்று

வழியில் போட்டுவிட்டுச் சென்றனர். அதைப் பார்த்த சந்திரமதி, தன் பிள்ளையோ என ஐயம் கொண்டு கையில் எடுத்தாள். அக்குழந்தையைத் தேடிவந்த காவலர், அவள் கையில் குழந்தை இருப்பதைக் கண்டு, பற்றிச்சென்று மன்னனிடம் ஒப்பித்தனர். இவ்வளவும் முனிவர் வஞ்சனையால் விளைந்தவைகளே. காசிமன்னன், சந்திரமதியைக் கூப்பிட்டு விசாரித்தான். சந்திரமதிக்கு இக்கஷ்டங்களை அனுபவிப்பதிலும் இறந்துவிடுவதே மேல் என்னும் எண்ணம் உண்டாயிற்று. ஆதலால், 'நான்தான் இப்பிள்ளையைக் கொன்றேன்' என ஒப்புக்கொண்டாள். கொற்றவன் அவளுக்குக் கொலைத்தண்டனை விதித்தான்.

காவலர், அவளை மயானத்திற்குக் கொண்டு போயினர். அரிச்சந்திரனே அவளை வெட்டுமாறு நேர்ந்தது. அதற்காக அவளாவது, அரிச்சந்திரனாவது வருந்தவே இல்லை. அச்சமயத்தில் விசுவாமித்திர முனிவர், அவர்கள் எதிரில் தோன்றினர். "ஒரு பொய் கூறினால், உற்ற கஷ்டங்கள் நீங்கும்." என்றார். அதற்கு அவர்கள்,

'பதி இழந்தனம் பாலனை இழந்தனம் படைத்த
நிதி இழந்தனம் இனிநமக்கு உளதுஎன நினைக்கும்
கதி இழக்கினும் கட்டுஉரை இழக்கிலேம்" என்றார்
மதி இழந்து தன் வாய்இழந்து அருந்தவன் மறைந்தான்.'



அரிச்சந்திரன், வாளை ஓங்கினன். சந்திரமதி குனிந்தாள். சற்றும் தாமதிக்காமல் ஓங்கிய வாளை வீசினன் வேந்தன். அது அவள் கழுத்தில் ஒரு பூமாலையாக விழுந்தது. அச்சமயத்தில் தேவர்களும், பல முனிவர்களும் அங்கே கூடினர்கள். "அரிச்சந்திரன், நீதி தவருதவனே. அதில் சந்தேகமே இல்லை" எனப் புகழ்ந்தனர். முருகக் கடவுள் இறந்த மக்கள் இருவரையும் எழுப்பினர். விசுவாமித்திரர் தன் தவத்தில் பாதியை அரிச்சந்திரனுக்குத் தாரைவார்த்துக் கொடுத்தார். அவனிடம் பெற்ற அரசையும் திருப்பித்தந்தார். அம்மன்னன், முன்போலவே மனைவி மக்களுடன் மகிழ்ச்சியாய் ஆட்சி புரியலானன்.



## 22. அவ்வை பாடல்

நாம் முன் வகுப்புக்களில் அவ்வையாரைப் பற்றிப் பல விஷயங்கள் படித்திருக்கின்றோம். அவ்வம்மையார் எழுதிய சில செய்யுட்களும் நமக்குத் தெரியும். ஆனாலும், அவ்வை என்னும் மூதாட்டி இயற்றிய அருமையான செய்யுட்களை மேலும் மேலும் கற்க, யாருக்கும் ஆசை உண்டாகும். ஆதலால், அவ்வையார் பாடல்களில் இன்னும் சிலவற்றை இப்பாடத்தில் கூறுவோம்.

### 1. கொடியது.

கொடியது கேட்கின் நெடிய வெவ்வேலோய்
கொடிது கொடிது வறுமை கொடிது
அதனினும் கொடிது இளமையில் வறுமை
அதனினும் கொடிது ஆற்றஒணுக் கொடுநோய்
அதனினும் கொடிது அன்பு இலாப் பெண்டிர்
அதனினும் கொடிது
இன்பு உற அவர்கையில் உண்பதுதானே.

### 2. இனியது.

இனியது கேட்கின் தனிநெடு வேலோய்
இனிது இனிது ஏகாந்தம் இனிது
அதனினும் இனிது ஆதியைத் தொழுதல்
அதனினும் இனிது அறிவினர்ச் சேர்தல்
அதனினும் இனிது அறிவுள்ளோரைக்
கனவிலும் நனவிலும் காண்பது தானே.

## 3. பெரியது.

பெரியது கேட்கின் எரிதவழ் வேலோய்
பெரிது பெரிது புவனம் பெரிது
புவனமோ நான்முகன் படைப்பு
நான்முகன் கரியமால் உந்தி வந்தோன்
கரியமாலோ அலைகடல் துயின்றோன்
அலைகடலோ குறுமுனி அங்கையில் அடக்கம்
குறுமுனியோ கலசத்தில் பிறந்தோன்
கலசமோ புவியில் சிறு மண்
புவியோ அரவினுக்கு ஒருதலைப் பாரம்
அரவோ உமையவள் சிறுவிரல் மோதிரம்
உமையோ இறைவர் பாகத்து ஒடுக்கம்
இறைவரோ தொண்டர் உள்ளத்து ஒடுக்கம்
தொண்டர்தம் பெருமை சொல்லவும் பெரிதே.

## 4. அரியது.

அரியது கேட்கின் வரிவடி வேலோய்
அரிது அரிது மானிடர் ஆதல் அரிது
மானிடர் ஆயினும் கூன் குருடு செவிடு
பேடு நீங்கிப் பிறத்தல் அரிது
பேடு நீங்கிப் பிறந்த காலையும்
ஞானமும் கல்வியும் நயத்தல் அரிது
ஞானமும் கல்வியும் நயந்த காலையும்
தானமும் தவமும் தான்செயல் அரிது
தானமும் தவமும் தான் செய்வர் ஆயின்
வானவர் நாடு வழி திறந்திடுமே.

## 23. மாலைப்பொழுது

சூரியன், மேற்கே மறையும் சமயத்தை மாலை என்கிறோம். அச்சமயத்தில் வெயிலின் கடுமை தணிந்திருக்கும். பகல் முழுதும் பாடசாலையில் வாசித்த பிள்ளைகள் திரும்பி வீட்டுக்கு வரும் வேளை அதுதான். அவர்கள், அவசரம் அவசரமாக ஓடி வந்து, புத்தகத்தை இல்லத்தில் வைத்துவிட்டு, வெளியே செல்கின்றார்கள். அக்கம்பக்கத்து வீட்டுச் சிறார்களை அழைக்கின்றார்கள். அனைவரும் ஒன்றுகூடி விளையாடுகின்றனர். உத்தியோகஸ்தர்களும் கச்சேரியில் இருந்து, வீட்டுக்கு வருகின்ற வேளை அதுவே. அவர்களில் சிலர், வீடு அடைந்ததும் தம் பிள்ளைகளுக்குக் கல்வி போதிப்பார்கள். கையில் அழகான கோல் பிடித்து வெளியே உலவச் சிலர் ஏகுகின்றனர்.

பகலெல்லாம் வெளியே சென்று மாடுகளை மேய்த்த சிறுவர்கள், அவற்றை வீட்டுக்குத் திருப்புவார்கள். பசுக்கள் தம் கன்றுகளைப் பார்க்கவேண்டும் என்னும் ஆவலினால் ஆத்திரத்துடன் ஓடி வருகின்றன. கூலியின்பொருட்டு வேலை செய்தவன் வேலையை நிறுத்திவிட்டு, கூலி பெறுவதற்கு வேலை வாங்கியவர் வீட்டுத் தெருவில் காத்திருக்கின்றான் கூலி கிடைத்த உடனே கடைக்கு விரைந்து செல்வான். வேண்டிய தினுசுகளை வாங்கிக்கொண்டு, வேகமாகச் சென்று வீடு அடைவான். அப்போது அவனுடைய மனைவி மக்களின் மனம் குதூ

கலம் அடையும். தாய் மாடுகள் வரும் வேளை ஆன தைக் கன்றுகள் அறிகின்றன. கத்திக்கொண்டே கட்டுத்தறியைச் சுற்றுகின்றன. தெருவின் கோடி யில் வந்த பசுக்கள், தமது கன்றுகளின் குரலைக் கேட்டுப் பதிலுக்குக் கத்திக்கொண்டே வீடு அடை கின்றன. வீட்டில் உள்ளவர்கள் அவற்றைப் பிடித் துக் கட்டித் தீனி போடுகின்றனர்.

அப்பொழுது, சூரியன் எவ்வாறு இருக்கின் றது. மலையாலும், மேகத்தாலும் கொஞ்சம் மறை பட்டிருக்கும். மேற்குத் திக்கில் வானம் சிவந்திருக் கும். அப்போது காயும் வெயிலுக்கு, மஞ்சள் வெய் யில் எனப்பெயர். சற்று நேரத்திற்கெல்லாம் சூரி யன் மறைகிறான், சிறுமிகள் தெருவாயிலுக்கு நீர் தெளிக்கிறார்கள். கோலம் இடுகிறார்கள். திண்ணை யின்மீது ஒரு சாணி உருண்டைவைத்து அதன்மேல் தீபம் வைப்பார்கள். வீதியில் வரிசையாகத் தோன் றும் விளக்குகளைப் பார்க்க வெகு அழகாய் இருக் கும். தெருவில், நீர் எடுத்து வரப்போகிறவர்களை யும், ஜலம் சுமந்து திரும்பி வருகிறவர்களையும் பார்க் கிறோம்.

மாலைக்கடனை முடிப்போர் பலர், குளக்கரை யில் குழுமி இருக்கின்றனர். காலையில் மிக அழ காக மலர்ந்திருந்த தாமரை மலர்கள் வாடி இருக் கின்றன. அல்லி அரும்புகளோ அலர்வதற்கு ஆயத் ராய் இருக்கின்றன. கோயில்களில் மேளவாத்தி யம் ‘தாம், தாம்’ என்று முழங்குகின்றது. மணி

கள், கணகணவென்று ஒலிக்கின்றன. பத்தர்கள், பாடிக்கொண்டே கோயிலை நோக்கிச் செல்கின்றனர். பறவைகள், பேரரவத்துடன் கூட்டை நோக்கிப் போகின்றன. வெளியே ஆடப்போயிருந்த பிள்ளைகள் வீட்டுக்கு வந்து, விளக்கின் முன் இருந்து படிக்கின்றார்கள். உலவச் சென்றிருந்த உத்தியோகஸ்தர் கூட்டமும் கலைந்தது. ஒவ்வொருவரும் தனிப்பட்டு விரைவாக நடக்கின்றனர். இல்லத்தை எய்திச் சற்றே இளைப்பாறி, வீட்டுக்காரியங்களைக் கவனிக்கிறார்கள்.

வானத்தில், சோளம் பொரித்ததுபோல் பல நக்ஷத்திரங்கள் காணப்படுகின்றன. அவற்றின் இடையே பால்போலும் வெண்மை நிறமான சந்திரன் தயங்குகிறது. சந்திரனுடைய நிலவு, மக்கள் மனதுக்கு மட்டில்லாத மகிழ்ச்சியை விளைவிக்கின்றது. சந்திரிகை பட்டவுடனே வாடிய தாவரங்கள் வனப்புறுகின்றன. அல்லி அலர்கள் அனைத்தும் அழகாக அலர்ந்து ஆனந்தத்தை ஊட்டுகின்றன.

நிலா வெளிச்சத்தில் குளக்கரையில் இருந்தால், விதவிதமான காட்சிகளைக் காணலாம். வண்டுகள் இனிமையாகப் பாடுகின்றன. அல்லி மலரில் உள்ள மதுவைக்குடித்து மகிழ்கின்றன. " எப்பொழுதும் நான் காவல் செய்துகொண்டிருக்கின்றேன். ஆனால், அளிகள் வந்து தேனைக் கவர்ந்து செல்கின்றன " என்று முறை இடுவதுபோல் தவளைகள் கத்துகின்றன. அதைப் பார்க்க,

" தண்தாமரையின் உடன் பிறந்தும்
தண்தேன் நுகரா மண்டூகம்
வண்டோ கானத்து இடை இருந்தும்
வந்தே கமலமது உண்ணும் "

என்னும் செய்யுள் கவனத்துக்கு வருகிறது. தேனைத்திருடிச்செல்லும் வண்டுகளோடு, சண்டைக்குப்போவதுபோல, மீன்கள்துள்ளிக் குதிக்கின்றன. நீர்வாழ்வன இடம் விட்டு இடம் செல்வதாலும், காற்று எறிவதாலும் நீர் அலைகிறது. நீரில் பார்த்தால் வானத்தில் இருந்த சந்திரன் தவறிப் புனலில் விழுந்து தவிப்பதுபோல் தோன்றுகிறது. அச்சந்திரனைக் கரை ஏற்ற முயல்வன போன்று அல்லி யலர்கள் அசைகின்றன.

இனி, மக்களுடைய காரியம் யாது? உண்டு உறங்க வேண்டியதே. சூரியன் அஸ்தமித்துப் பத்து நாழிகை ஆவதற்குள், பெரும் பாலோர் வேலையை நிறுத்தி விடுவார்கள். சிலர், ஏதாவது வேலை செய்து கொண்டிருந்தாலும், " சேமம் புகினும் யாமத்து உறங்கு " என்னும் முதுமொழியைப் பலர்மறப்பதே இல்லை. உழைத்த உடலுக்கு ஓய்வைத் தரப் படுக்கைக்குச் செல்கின்றனர். மறுபடி " வைகறைத் துயிலெழு " என்றபடி, எழுவார்கள்.



## 24. சிவாஜி மன்னன்

ஷாஜி என்பவர் மஹாராஷ்டிர வம்சத்தைச் சேர்ந்தவர். அவர் பீஜப்பூர் சுல்தானுடையசேனைத் தலைவர். ஷாஜி கைதேர்ந்த போர்வீரர். பீஜப்பூர் அரசரும், ஆமத் நகரத்து அரசரும் பலமுறை அவருடைய உதவியைப் பெற்றார்கள். அதன் பயனாக, ஷாஜி பூனாவையும், அதைச் சுற்றி உள்ள சிறிது பாகத்தையும் ஜாகிராகப் பெற்றார். அவர் மனைவியின் பெயர் ஜீஜிபாய். அவ்வம்மையின் வயிற்றில் இரு ஆண்பிள்ளைகள் பிறந்தனர். அவர்களில் ஒருவர் பெயர் 'சிவாஜி' என்பது. ஷாஜி என்பவர் ஜின்னார் கோட்டையில் வசித்திருந்தார். ஆனாலும், அவர் அடிக்கடி போருக்குச் செல்லவேண்டி யிருந்தபடியால், தன்மனைவி மக்களைப் பூனாவுக்கு அனுப்பி விட்டார்.

ஷாஜிக்கு சிநேகிதர் ஒருவர் இருந்தார். அவர் அந்தணர் குலத்தைச் சேர்ந்தவர். 'தாதாஜி கண்டி தேவர்' என்பது அவர் பெயர். பூனாவில் ஷாஜியின் மனைவி மக்களுக்கு உதவியாய் இருந்தவர் அவரே. தாதாஜி நன்கு வாசித்தவர். கற்றதற்கு ஏற்ற ஒழுக்கம் உடையவர். நட்புக்கு உரிய நயகுணம் படைத்தவர். கண்டிதேவர் ஷாஜீயின் மக்களை வீரர்களாக்க வேண்டும் என்று பூரணமாகக் கருதி இருந்தார். ஆகையால், அவர் ராமாயணம், பாரதம் முதலிய கதைகளை அப்பிள்ளைகளுக்குப் புகட்டுவார். அவற்றுள்ளும், வீரம் ததும்பும் விஷயங்களை விரி



வாகவும், அழகாகவும் கூறுவார். அதை எல்லாம் கேட்ட சிவாஜி, தானும் ஒரு சிறந்த வீரனாக

வேண்டுமென்னும் விருப்பம் கொண்டான். அதை அறிந்த ஜீஜிபாயும் அவ்வெண்ணத்தை விருத்தி செய்ய ஆரம்பித்தாள். இந்தியாவில் இருந்த பல வீரர்களைப்பற்றிய வரலாறுகளை இடைவிடாது இயம்புவாள். தாதாஜியின் கற்பனையாலும், ஜீஜியின் போதனையாலும் சிவாஜியின் சித்தம் திடப்பட்டது.

சிவாஜிக்கு மனோதிடம் உண்டானதுபோலவே, தேக வலிமையும் ஏற்பட்டது. ஒரு சிறந்த வீரனுக்கு இவ்விரண்டைவிட வேண்டியது யாது? ஆகையினால், சிவாஜி இளமையிலேயே போர்த்தொழிலில் பழக ஆரம்பித்தார். "குலத்தளவே ஆகும் குணம்," "குலவித்தை கல்லாமல் பாகப்படும்," "குல வித்தை கற்றுப் பாதி கல்லாமல் பாதி" என்னும் முதுமொழிகள் பொய்த்துப் போவது உண்டா! சின்னாட்களில் சிவாஜி இணையற்ற போர்வீரராயினர். ஆனால், சிவாஜிக்கு எழுதவோ, படிக்கவோ ஒன்றும் தெரியாது. அவருக்குப் பதினாறு வயது ஆயிற்று. தன்னைப்போன்ற வீரர்கள் நிறைந்த ஒரு பெரும்படையைத் திரட்டினார். அயல் நாடுகளில் கொஞ்சம் கொஞ்சமாக ஜயித்துக்கொண்டே வந்தார். பீஜப்பூர் சுல்தானுக்குச் சொந்தமான சிறிது பாகத்தையும் இவர் ஜயித்தார். சுல்தான் சிவாஜியோடு கொஞ்சகாலம் விரோதம் பாராட்டினார். ஆனால், அது செல்லவில்லை. அதன்பயனாக, அப்சல்கான் என்பவன் இறந்தான். ஆதலால், சிவாஜியோடு சமாதானம் செய்துகொண்டார்.

சிவாஜி, மிகவும் தந்திரமுடையவர். ஒருமுறை அவரை அவுரங்கஜீப் வஞ்சனையாகச் சிறை செய்தான். சிவாஜி, மிகத் தந்திரமாகப் பழக்கூடையில் மறைந்து, தப்பி ஒடிவிட்டார். அதுமுதல் முகலாய அரசனை அவுரங்கஜீப்பின்மீது அதிக கோபம் கொண்டிருந்தார். பின்பு அவர், முகலாயருடன் போர்செய்து வெற்றி அடைந்தார். முடிவில் அவர் ஒரு ராஜ்யத்தை ஏற்படுத்தினர். பலமான ஒரு புதிய கோட்டையும் அமைத்தார். அதுவே 'ரைகார்' அல்லது 'ராஜகிரிக் கோட்டை' என்பது. சிவாஜி தனது நாற்பத்தேழாவது வயதில் அக்கோட்டையில் முடி சூட்டிக்கொண்டார்.

சிவாஜி மன்னர் கடைசீவரையில் மிகுந்த கருணையும் பக்தியும் உடையவராகவே இருந்தார். அவர், தன் காலத்தில் இருந்த இராமதாஸர் என்னும் விஷ்ணு பக்தருக்கு சீஷரானர். ராமதாசரின் அனுமதியின்படியே காரியங்களை நடத்துவார். அக்காலத்தில் இருந்த துக்காராம் என்பவரிடத்திலும், சிவாஜிக்கு விசுவாசம் அதிகம். சிவாஜி தன் விரோதிகளுக்கும் தீங்கு செய்யக் கருதமாட்டார். ஆதலால், அவரை உத்தம புருஷர் என்றே உலகம் புகழ்கிறது.



## 25. கண்ணைக் காக்கும் முறை

மனிதனுக்கு உள்ள ஐம்பொறிகளுள் கண்ணும் ஒன்று. " கண்ணில் சிறந்த உறுப்பு இல்லை "

என்பது பழமொழி. எவ்வளவு அழகு உடையவ னாயினும் அவனுக்குக் கண் இல்லையானால், கவின் இல்லை. "கண் இல்லாத உடலும், சந்திரன் இல் லாத வானமும், மந்திரி இல்லாத அரசாட்சியும், புலவர் இல்லாத சபையும், மக்கள் பெறாத வாழ்க் கையும் பயன் அற்றவை" என்று கூறுவர் பெரி யோர். கண் என்னும் பொறியில், காணும் அறிவு அமைந்துளது. கண் இல்லாவிட்டால் பொருள்க ளின் வடிவத்தையும், நிறத்தையும் உள்ளவாறு அறிய இயலாது. ஆதலால், அதை நாம் ஜாக்கிர தையாகக் காப்பாற்ற வேண்டியது அவசியம் அல்லவா.

படிக்கும் மாணவர் பலர், கண்ணுக்குக் கண் ணாடி போட்டுக் கொள்கின்றனர். ஏன் தெரியுமா? அவர்களுடைய கண்ணுக்கு பார்த்து அறியும் சக்தி குறைந்துவிட்டது. எதனால், குறைந்தது என்று நீங்கள் கேட்பீர்கள். அதிக வெளிச்சம் தராத விளக்கின் முன்னும், மிகுந்த வெளிச்சத்திலும், வெய்யிலிலும் படிக்கக்கூடாது. "சூரியன் மறைந்து இருள்சூழும் சமயத்தில் (இருள் நிறையும் வேளை யில்) வாசிக்கக்கூடாது" என்று நம் வீட்டில் இருக் கின்ற பெரியோர் கூறுவது உண்டு அல்லவா. அப் படியே நிலவிலும் படிக்கக்கூடாது. தீபத்தைக் கண்ணுக்கு எதிரில் வைத்துக்கொண்டு வாசிப்பதும் பிசகே. சிறிய அச்சு எழுத்துக்களையும், மிகக் கிறுக் கலாக உள்ள எழுத்துக்களையும் வாசித்தல் தகுதி அன்று.

குனிந்து வாசித்தலும், புத்தகத்தை மிகச் சேய்மையிலாவது, அதிக அண்மையிலாவது வைத்துக்கொண்டு வாசித்தலும் கெட்ட வழக்கங்களாம். இப்படிப்பட்ட கெட்ட வழக்கங்களால், நாமே கண்ணைக் கெடுத்துக் கொள்ளுகின்றோம். இரவில் அதிக நேரம் விழித்திருப்பதாலும், பகலில் தூங்கி விட்டு இரவில் தூக்கம் பிடிக்காமல் புரட்டிக் கொடுத்துக்கொண்டு இருப்பதாலும், காற்றில்பறக்கும் தூசு முதலியவைகள் கண்ணில் விழுவதாலும், மிக நுட்பமான தையல்வேலை, அச்சு எழுத்துப் பொறுக்கி அடுக்கும் வேலை, மெல்லிய நூல் கோக்கும் வேலை முதலியன செய்வதாலும் கண் பார்வை கெடுகிறது.

நடுத்தரமான வெளிச்சத்தில், நல்ல எழுத்துக்களைப் படிக்கவேண்டும். புத்தகத்தை மார்பு அளவில் பிடித்துத் தலையை நிமிர்த்தி வாசித்தல் நன்று. விளக்கு ஒளியில் படிக்குங்கால், நமது பக்கத்திலாவது, பின்னாலேனும் தீபத்தை வைத்து, அங்கிருந்து ஜோதி வருமாறு செய்தல் நலம். ஒரு அடி தூறத்திற்கு அதிகப்படாமலும், குறையாமலும் புத்தகத்தை அமைக்கவேண்டும். அதிக காற்று வீசும் போது வெளியே போக நேர்ந்தால், தூசுகள் விழியில் விழாதவாறு கண்ணாடி போடவேண்டும். ரயில், மோட்டார் முதலியவற்றில் பிரயாணம் செய்யும் பொழுது, நிலக்கரித்துணுக்கு, மண், தூசு முதலியவை விழாதபடி, கண்ணைக் காப்பாற்றவேண்டும். விழுந்துவிட்டாலும், கண்ணில் கையை வைத்துக்

கசக்கக்கூடாது. சற்று நேரம் கண்ணை மூடிக கொண்டிருந்தால் விழுந்த தூசு, பீளை (பூளைளை) யோடு வெளிவந்து விடும். வராவிட்டால், துளி ஆம ணக்கு எண்ணெய்யைக் கண்ணில் விடவேண்டும். அதனல், தூசு நழுவி வெளிவந்துவிடும்.

கண்ணில் கொசு, ஈ முதலியன உட்காராதபடி காத்துக் கொள்ளவேண்டும். சிலர் எண்ணெய் தேய்த்து முழுகும்பொழுது கண்ணிலும் எண் ணெய்யை விட்டுப் பெருவிரலால் அறக்குவார்கள். அது முற்றிலும் குற்றம். எண்ணெய் கண்ணில் விட்டாலும், இரண்டு அல்லது ஒரு துளிக்கு மேல் விடலாகாது ; கையைக் கண்ணில் வைத்தல் ஆகாது. சற்று நேரம் கண்ணை மூடியிருந்து பிறகு, இரண்டு அல்லது மூன்று முறை விழித்து விழித்து மூடிச்சற்று நேரம் குனிந்திருக்கவேண்டும். அப்போது, அழுக் கும் எண்ணெயுமாகக் கலந்து மூக்கின் ஓரமாக ஒழுகி விடும். கண் நோய் வந்துவிட்டால், சிலர் பலவித மருந்துகளை உபயோகித்து விடுகின்றனர். அப் படிச் செய்வது முழுதும் பிழையே. அதனல், கண் முற்றும் கெட்டுவிடுவதும், பூ விழுவதும்உண்டு. அப் படிப்பட்ட கஷ்டங்கள் நேராதபடி, ஆஸ்பத்திரிக் குச் சென்று சிகிச்சை செய்து கொள்வதே நன்று. மேலே கூறிய முறைகளை அனுசரித்து நடந்து கொள்ளுகின்றவர்களுக்கு விருத்தாப்பியம் வந் தாலும் விழிக்குப் பழுது ஏற்படுவது இல்லை.



## 26. ரகரமும் றகரமும்—II.

சீரிய=மேலான சீறிய=கோபித்த

சீரிய குணம் உடையவர்களைச் சீறியவன் கெடுவான்.

சுருக்கு=குறைவுபடுத்து சுறுக்கு=விரைவு

நமது வாழ் நாள் சுருங்கிக்கொண்டே இருக்கிறது. நன்மைகளைச் சுறுக்காகச் செய்.

சூரன் - சூரியன் சூறன்=மூஞ்சூறு

சூரனுடைய வெய்யிலில் அகப்பட்டு ஓர் சூறன் இறந்தது.

சேரல்=கிட்டுதல் சேறல்=நடத்தல்

பொழுது அமர்வதற்குள் வீடு சேரவேண்டு மாயின் விரைந்து சேறல் வேண்டும்.

சொரிதல்=பெய்தல் சொறிதல்=தினவு அடக்கல்

மழை சொரியும்போது நான் தலையைச் சொறிந்தேன்.

சோரு=மெலி சோறு=சாதம்

நீ மிகச் சோருவதனால் அவசியம் சோறு உண்ணவேண்டும்.

தரி=தங்கு தறி=வெட்டு

ஒரு நிமிஷமும் ஓர் இடத்தில் தரியாதவன் காலைத் தறிக்கவேண்டும்.

திரம்=நிலை திறம்=குணம்

கட்குடியன் திரம் இன்றிப் பேசும் திறம் உடையவன்.

திரை = அலை　　　　திறை = கப்பம்

திரைகள் வீசும் கடல் மார்க்கத்தில் பொருள் கொணர்ந்தால் அரசனுக்குத் திறை செலுத்தல் வேண்டும்.

துரவு = கிணறு　　　　துறவு = நீக்குதல்

துரவு நீரைக்குடித்தல் நல்லது. மற்ற அசுத்த நீரைத் துறவு செய்தல் அதைவிட நல்லதே.

துரை = அரசன்　　　　துறை = நீர்த்துறை

ஒருதுரை வெப்பம் தணித்தல் பொருட்டுத் தடாகத்தின் துறையை அடைந்தார்.

நரை = வெள்ளை　　　　நறை = தேன்

தலைமயிர் நரைக்கவேண்டுமானல் கொஞ்சம் நறையைத் தலையில் தடவிக்கொள்.

நெரி = அழுத்து　　　　நெறி = வழி

திருடன் என் கழுத்தை நெரிக்கும்போது நெறியே சென்ற ஒருவர் வந்து காத்தார்.

பரம் = மேல்　　　　பறம் = மலை

பரமபிதா (கடவுள்) கைலைப்பறம் அமர்ந்தார்.

பரவை = சமுத்திரம்　　　　பறவை = பட்சி

பரவையில் வாழும் பல பறவைகளை நான் பார்த்தேன்.

பரி = குதிரை　　　　பறி = பிடுங்கு

பரியின்மீது சென்றவனுடைய பணத்தைக் கள்வன் பறித்தான்.

பாரை=பூமியை　　　　பாறை=கல்

பாரை உழும்போது ஒரு பெரிய பாறை தோன்றியது.

புரம்=நகரம்　　　　புறம்=வெளி

விழுப்புரத்தில் இருந்து நேற்றுத்தான் புறம் வந்தேன்.

பெரு=பெரிய　　　　பெறு=அடை

நன்றாக உழைக்கிறவன் பெரும் பதவியைப் பெறுவான்.

பொரு=சண்டைசெய்　　　　பொறு=மன்னி

பொருஞ் சமயத்திலும் வலி இல்லாதவனைப் பொறுக்கவேண்டும்.

பொருப்பு=மலை　　　　பொறுப்பு=கடமை

மாடுகளைப் பொருப்பின் மீது ஏறாமல் பார்த்துக் கொள்வது இடையன் பொறுப்பு.

மரம்=விருட்சம்　　　　மறம்=பாவம்

பூத்தும் காய்த்தும் உள்ள மரத்தை வெட்டுவது மிகவும் மறம்.

மரு=வாசனை　　　　மறு=குற்றம்

மருநிறைந்த மலரைக் காலால் மிதிப்பது மறுவே.

மரை=தாமரை　　　　மறை=ஒளி

கையில் இருந்த மரைமலரை ஏன் மறைத்தாய்.

மாரி = மழை　　　　　　மாறி = வேறுபட்டு

மாரிபெய்து வெள்ளம் வந்ததால் ஆற்றில் மேடு, பள்ளமாக மாறிற்று.

விரகு = தந்திரம்　　　　　　விறகு = கட்டை

விறகு கற்றவன் ஆயினும் விறகு இல்லாமல் சமைப்பானு ?

விரல் — கையிலும், காலிலும் உள்ள விரல்　　　　　　விறல் = வலிமை

ஏகலைவன் விரல் போய் விட்டபடியால் வில் விடும் விறல் நீங்கியது.

வீரி = காளி　　　　　　வீறி = ஓங்கி

வீரி ஆலயத்தில் உள்ள விருக்ஷம் வீறி வளர்ந்தது.





## 27. மனம்போல மணம்

1. திருமிகும் டில்லி என்னும் திவ்விய ராஜ்யத்தோடு
தருவளர் சோலை அஜ்மீர் தன்னையும் ஆண்ட வேந்தன்
பிருதிவி என்னும் வீரன் பிழைஇலா மனத்தன் மெய்
[யன்
பெருமைசேர் கல்விஞானம் பெற்றவன் கருணை ஆளன்.

2. ஈடுஇலா இவன்சிறப்பு எங்குமே பரவி நிற்க [ய்வோன்
ஊடிய மனத்தான் கானோஜ் உரிமைகொண்டு ஆட்சி செ
நீடிய பொறுமையாலே நெறிஇன்றி இகலே கொண்
[டான்
பீடுஇலா அன்னவன்தன் பெயர்ஜய சந்திரன்காண்.

3. பிருதிவி சிறிய தாயின் பிள்ளையாம் கானோஜ் மன்னன்
செருவினைச் செய்ய எண்ணிச் சேர்த்தனன் பலரை
[ஒல்லை
வருவதை ஆராயாமல் வந்தனன் யுத்தம் செய்தான்
பெரும்படை தோற்றுப்போகப் பின்பு அவன் பிடிக்கப்
[பட்டான்.

4. சிறைதனில் இருந்த அந்தத் தீயவன் தனக்கு இரங்கி
முறைபிரு திவிமன் விட்டான் முன்னிலும் முனிவு
[கொண்டு
உறையுளே அடைந்து வாழ்ந்தான் உற்றஅம் மன்ன
[னுக்குக்
குறைவுஇலா எழிலைக்கொண்ட குமரியாள் ஒருத்தி
[உண்டு.

5. அம்மகள் பெயர்சம் யுக்தை அறிவினில் மிக்காள் கல்வி
செம்மைசேர் ஒழுக்கம் உள்ளாள் சிறந்தவள் ஆதலாலே
அம்மைகூர் மணம்முடிக்க ஆவல்கொள் பிருதிவிக்கு
'செம்மலே முடிப்பேன்' என்று சேபிழை [1] ஒருத்தி
[சொன்னுள்.

6. சொன்னவள் தந்தத் தாலே சுந்தரப் பதுமை ஒன்று
மன்னவன் பிருதிவிக்கு மாறுஇன்றிச் செய்துகொண்டு
கன்னமா புரிக்குச் சென்றுள் காரிகை சம்புக் தைக்கு
இன்இயல் தாதியாகி இருந்தனள் ஏவள் செய்தாள்.

7. தாதியாய் இருந்த அந்தத் தையல்,சம் யுக்தை மாட்டு
நீதிசேர் பிருதிவிப்பேர் நிருபனைப் புகழ்ந்துபேசி
கோதிலாப் பதுமை காட்டிக் கோதையை இசையச்
[செய்தாள்
தாதையும் சம்யுக்தைக்குத் தனிச்சுயம்வரம் அமைத்
[தான்.

8. சுயம்வரம் தனக்கு மன்னர் சூழ்ந்தனர் பிருதிவிக்கு
நியமமாய்ப் போக்கும் ஓலை நிறுத்தினன் கானேஜ்
[கோமான்.

---

1 ஒருத்தி=பிருதிவி அரண்மனையில் இருந்த ஒரு தோழி.

புயவலி மிகுந்த டில்லிப் புரவலன் உருவைச் செய்து
வயிரத்தால் காவல்செய்ய வாயிலில் வைத்து இருந்
[தான்.

9. ஆயினும் பிருதிவிக்கு அணிமணச் செய்தி தன்னைப்
போயினர் உரைத்தார் சில்லோர் புரவலன் உருக்கரந்து
தீயவன் அறியாவண்ணம் தீவிரமாகச் சென்றான்
வாயிலில் இருந்தான் மங்கை வந்தனள் மணப்பந்தற்கு

10. தோழியர் அங்கு இருந்த துரைகளின் குலமும் பேரும்
ஊழினால் கூறினார்கள் உவப்பு ஒரு சிறிதும்இன்றி
ஆழிசேர் கையில்கொண்ட அலர்மண மாலைதன்னை
'வாழிய மன்ன' என்று வாயிலின் பதுமைக்கு இட்
[டாள்

11. பார்த்தனன் தந்தை மெத்தப் பதைத்தனன் பல்கடித்து
வேர்த்தனன் மெய் இரண்டு மீசைகள் துடிக்க வாயால்
ஆர்த்தனன் அவனி வேந்தர் அனைவரும் வெகுளி
[கொண்டார்
சேர்த்தனன் பரியில் ஏறிச் சென்றனன் டில்லி ஏந்தல்

12. சென்றவன் தன்னைக் கானோஜ் சேனைகள் தொடர்ந்து
[இளைத்து
நின்றன; நிருபன் மாதை நிமிஷத்தில் டில்லி சேர்த்
[தான்
வென்றிசேர் வேந்தனுக்கும் விருப்புஉற்ற சம்யுக்
[தைக்கும்
மன்றலும் நிகழ்ந்தது; ஆங்கே மகிழ்ந்து இனிது
[உறைதல் உற்றார்.



# 28. நெருப்புக் கோழி

மாணவர்களே! நான் யார் என்று, உங்களுக்குத் தெரியுமா? என் உருவத்தை உற்றுப் பாருங்கள். நீண்ட கால்களும், பருத்த உருவமும் காணப்பட்டாலும், ஒரு கோழியோடு ஒப்பாக இருக்கின்றேன். தாங்க முடியாத வெப்பம் உள்ள பாலைவனத்தில் நான் வசிக்கின்றேன். நெருப்பில் இருந்தாலும் இருக்கலாம்; பாலை வனத்தில் வாழ்வது மெத்த கஷ்டம் என்று உங்கட்குத் தெரியுமே. அக்காரணத்தால் அனைவரும் என்னை நெருப்புக் கோழி என்பர். பாலை வனப்பட்சி என்றும் சிலர் பகர்வர். என் வரலாற்றைக் கூறுகின்றேன் கேளுங்கள்.

நான் பாலைவனத்தில் உறைவதாக உரைத்தேன் அன்றோ? அங்கே எனக்கு என்ன உணவு கிடைக்கும்? ஏதாவது கிடைத்தாலும் அடிக்கடி கிடைப்பது அருமை. ஆதலால், எது கிடைத்தாலும், எவ்வளவாய் இருந்தாலும் இடைவிடாது புசித்துக்கொண்டே இருப்பேன். கிடைப்பவை மரத்துண்டானாலும், இரும்புத் துண்டெனினும், கரிகளாயினும் புசிப்பேன். நானும், முட்டை இட்டுக்குஞ்சு பொறிக்கும் இனம் என்று, நீங்களே தெரிந்து கொண்டிருப்பீர்கள். முட்டையை ஆணும், பெண்ணும் மாறிமாறி அடைகாப்பது எங்கள் இனத்தாரின் வழக்கம். எங்கள் முட்டைகளை யாராவது பார்த்தாலும், தொட்டதாக ஐயம் ஏற்படினும் அவற்றை

உடைத்து நாசப்படுத்தி விடுவோம். எங்களில் ஐந்துவகை உண்டு.

ஆப்ரிக்கா தேசத்தில் உள்ள ஸஹாரா பாலை வனம் முதலியவற்றில் வசிப்பவைகளுக்கு ஆஸ்திரி கம் என்றுபெயர். தென் அமெரிக்காவில் உள்ளவை ரவியம். நவஜிலாந்து தீவுகளில் உறைவன கச வாரி, ஏமு என்னும் இருவகைகள். எங்களுள் எவ் வகையாரும் கோழியைப் போலக் கூடிவாழும் தன்மை உடையவர்களே. ஆஸ்திரகம், ரவியம், ஆப்திரேயம் என்னும் மூவகையினரும் இடுகின்ற முட்டை வெண்மையானது. கசவாரியும் ஏமுவும் ஈனும் முட்டை கருமை கலந்த பசுமை நிறமானது. இப்படியே உருவத்திலும், நிறத்திலும், வழக்கத் திலும் எங்களுக்குள் சிற்சில வேற்றுமைகள் உண்டு.

மனிதர்களால், எங்களுக்கு தீமை ஏற்படும் என்று பயந்தே நாங்கள் கடுஞ்சுரத்தில் காலம் கழிக் கின்றோம். அப்படி இருந்தும் மாந்தர் எங்களை விடுவதில்லை. வேட்டை ஆடிப் பிடித்து வதைக்கின் றனர். மனிதர் தனித்து வந்தால் நாங்கள் அஞ்ச மாட்டோம். தைரியத்தோடு எதிர்த்துச் சமர் செய் வோம். ஆகையால், அவர்கள் கூட்டமாகவே வரு வார்கள். நாங்கள் நேராக ஓடினல் எவராலும், எவ்விதமும் எங்களைப் பிடிக்க இயலாது. வேட் டைக்காரர்கள் குதிரையின்மீது ஏறிக்கொண்டு நாங்கள் வளைந்து வளைந்து ஓடுமாறு துரத்துவார் கள். அவ்வாறு ஓடுவதால் நாங்கள் களைத்துப்



போவோம். அப்போது மணலிலாவது, புதரிலாவது எங்கள் தலையை மறைத்துக்கொள்வோம். அதனால், தேகம் முழுதும் மறைந்துவிட்டதாக எங்கள் கருத்து. உடனே வந்து வேடுவர் எங்களைப் பற்றிக்கொள்கின்றனர்.

சிலர், சுருக்கு இட்ட கண்ணிக் கயிறுகளைக் கழுத்தில் விழுமாறு வீசுவார்கள். அக்கயிறு எங்கள் கழுத்தில் விழுந்ததும் இழுத்துக் கண்டத்தை இறுக்கிக்கொள்ளும்படி செய்கின்றனர். அதனால், நாங்கள் மூச்சுத் திணறிக் கீழே விழுவோம். அச்சமயத்தில் அருகில் வந்து சுருக்கை அவிழ்த்துப் பற்றிச்செல்வர். மற்றுஞ் சிலர், நீண்ட கயிறு ஒன்றை எடுத்து இரு முனைகளிலும் ஒவ்வொரு கல்லைக் கட்டுவார்கள். அதை நாங்கள் ஓடும்போது கால்களின் மீது சுழற்றி எறிவார்கள். அக்கயிறு கால்களில் சுற்றிக்கொள்ளும். அப்படிச் சிக்கிக்கொண்டால்

நாங்கள் ஓடமுடியாமல் தவிப்போம். அதைப் பார்த்துக்கொண்டே இருந்து தாமதம் இன்றி வந்து பற்றி ஏகுவர். மனிதரால் எங்களுக்கு உண்டாகும் இன்னலை எண்ணிப்பாருங்கள். இனிமேலாவது, இவ்விதமான தீமைகளை அவர்கள் செய்யாதபடி தடுப்பீர்கள் என்றே உங்களிடம் எங்கள் குறைகளைக் கூறினேம். நாங்கள் மாத்திரமா எவ்வளவோ பறவைகளும் மிருகங்களும் மக்களால் மனம் வருந்திச் சாகின்றன. எவ்வுயிருக்கும் இன்னல் செய்யாதவனே இறைவனுக்கு அன்பன் என்பதை அவர்கள் மறந்துவிட்டார்கள் போலும்.



## 29. ரசவாதம்

பொன், மிகப் பிரகாசம் உடையது. ஆதலால், அதன்மீது யார்க்கும் விருப்பம் உண்டு. விருப்பம் இருந்தாலும் அளவோடு இருத்தல் வேண்டும். அதிக ஆசைப்பட்டு அலைந்தால் அதிக நஷ்டமே உண்டாகும். பொன்னின்மீது அதிக ஆவல் கொண்டு அலைபவர்களைத் தண்டிக்கச் சிலர் ஏற்பட்டிருக்கின்றனர். அவர்கட்கு 'ரசவாதிகள்' எனப் பெயர். ரசவாதி, எவரையும் எளிதில் ஏய்த்துவிடுவான். நயமாகப் பேசி நடுக்கொள்ளை புரிவான். அவன் வேஷம் மிக வியப்பானது. தலையை மொட்டை அடித்துக்கொண்டு, காவிச் சட்டை அணிந்து, திருநீறு பூசி, ருத்திராக்ஷமாலை தரித்து, வேத்திரம் கையில் தாங்கி வருவான். எப்பொரு

ளின்மீதும் ஆசை அற்றவனைப்போல் பேசி நடப்பான். அத்தன்மையை உடைய ரசவாதி ஒருவனால், வணிகன் ஒருவன் பட்ட பாட்டை இங்கே கூறுவோம்.

கலிங்க நாட்டில் அரிபுரம் என ஓர் ஊர் உண்டு. அவ்வூரில் தேவதத்தன் என்னும் வணிகன் ஒருவன் உறைந்தான். அவன் மிகுந்த செல்வம் உடையவன். தேவதத்தனுக்குத் தருமதத்தன் என்னும் குமாரன் ஒருவன் இருந்தான். தருமதத்தனுடைய சிறு பிராயத்திலேயே பெற்றோர் இருவரும் இறந்தனர். தருமதத்தன் சிறுவன் ஆயினும் நல்ல புத்திசாலி. தந்தைக்குப் பின்பு தானும் மிகுந்த திரவியம் சேர்த்தான், யாதொரு கஷ்டமும் இல்லாமல் சுகமாகக் காலம் கழித்தான். ஒரு நாள் அவன் வீட்டிற்கு ரசவாதி ஒருவன் வந்தான். அவனைக் கண்டதும் தருமதத்தன் மனம் மயங்கிவிட்டது. உடனே காலில்



விழுந்தான். எழுந்து கைகட்டி, வாய்பொத்தி எதிர் நின்றான். "பெரியோரே! தாங்கள் எவ்வூரோ? எதன்பொருட்டு இங்கே எழுந்தருளினீர்களோ? இந்த பீடத்தில் இருங்கள்" என ஒரு ஆசனம் இட்டான். வாதி வாய் திறவாமல் அமர்ந்தான். தத்தன் பின்னும், "சுவாமி! நடந்த களைதீர நல்லுணவு கொள்ளுங்கள்" என, உள்ளே அழைத்துச் சென்று உண்பித்தான்.

உண்ட ரசவாதி, மறுபடி ஆசனத்தில் அமர்ந்தான். தருமதத்தனை விளித்து, அருகில் இருக்கச் சொன்னான். உட்கார்ந்த தருமதத்தனைப் பார்த்து "அப்பா! எனக்குச் சிவபெருமான் இடத்தில் இருந்து ஒரு மந்திரம் கிடைத்திருக்கிறது. அதன் உதவியால், உலகில் உள்ள பொருளை எல்லாம் பொன்னாக்குவேன்; வெள்ளியேனும், இரும்பேனும் இருந்தால் பொன் என்று கூறச் செய்வேன்; இந்த விஷயத்தை வேறு யாருக்கும் கூறமாட்டேன்; நீ மிகவும் நற்குணம் உடையவன்; ஆகையால், உனக்கு ஒளிக்காமல் உரைத்தேன்; உன்னிடத்தில் உள்ள பொருள் அனைத்தையும் கொணர்ந்தால், பொன்னாக்கிக் கொடுப்பேன்; எனக்கு ஒரு துரும்பு அளவும் வேண்டாம்" என்றான். அச்சொல்லால், வணிக வாலிபன் அறிவு கலங்கினான். அந்த க்ஷணமே எழுந்து ஓடினான். வீட்டில் இருந்த நகை, நாணயம் முதலிய அனைத்தையும் அப்படியே வாரிவந்து அக்கையன் கண் முன்வைத்தான்.

வணிகன் வைத்த பொருளைக் கண்ட வாதி, கைகொட்டி நகைத்தான். "தருமதத்தா! வணிகருள் தலைமைபெற்ற உன்னிடம் உள்ளது இவ்வளவு தானா? என் வித்தைக்கு இது எம்மாத்திரம்? இது வேண்டாம்; நீ என்னோடு சும்மா வா. இதைவிட ஆயிரம் மடங்கு அதிகமான பொன் உனக்குத் தருகின்றேன்! வைத்துக்கொண்டு சுகமாய் இரு" என்று இயம்பினன். கேட்ட குமரன் "சாமி! சற்று நிதானியுங்கள்; இதோ வந்தேன்" என்று கூறி ஏகினன். தன் வீடு, நிலம், மாடு முதலியவற்றை விற்றான். தன் பெயரின் அர்த்தத்திற்குத் தகுதியாகத் தான் செய்த தருமத்தை விலைக்குத் தத்தம் செய்தான். கிடைத்தவற்றைக் கையில் ஏந்தி வந்து கபடன் எதிரில் இட்டான்.

வாதிக்கு மகிழ்ச்சி பொங்கிற்று. "ஐயா! ஓர் இருண்ட அறை வேண்டும்." என்றான். அவ்வாறே தத்தன் ஓர் அறைக்கு அழைத்துச் சென்றான். அங்கே சென்றதும் இருந்த பொன், வெள்ளி முதலிய அனைத்தையும் ஒன்றாக உருக்கி ஒரே மொத்தை ஆக்கினான். அதை ஒரு மண் மூசியில் வைத்தான். விறகுகளை அடுக்கி, நெருப்பு மூட்டினான். அதன் மேல் ஒரு விதமான பொடியைத் தூவினான். அதனால், மிகுந்த புகை கிளம்பி அறை முழுதும் சூழ்ந்தது. தத்தனோ விழியைத் திறக்கமுடியாமல் தவித்தான். அப்போது வஞ்சகன், பொன் உருண்டை வைத்திருந்த மூசியை எடுத்துத் தன் துணியில் மறைத்துவிட்டு அதைப்போன்ற வேறு ஒரு

மூசையை எடுத்து அங்கே வைத்தான். உடனே தூமத்தை நீக்கினன். தத்தன் மெதுவாகக் கண்ணை விழித்தான். வாதி "தத்தரே! இந்தப் பொன் நிலற்ந்த மண் குகையை நீங்களே எடுத்து நெருப்பில் வையுங்கள்; மூன்று நாள் வரையில் இவ்விடத்திலேயே தாங்கள் இருக்கவேண்டும்; புசிக்கவும் கூடாது; எவருடனும் பேசாமல் இருக்க வேண்டும்; என்னை மறத்தல் கூடாது; நான் காளி கோயிலுக்குச் சென்று ஒரு பூஜை முடிக்க வேண்டும்; அதை முடித்துவிட்டு நான்காம் நாள் பகல் வருவேன்." என்றான். வணிகன் அதைக் கேட்டு, மண் மூசையை எடுத்து நெருப்பின் மேல் வைத்தான். வாதி வெளி ஏறினன். வணிகமகன் அங்கேயே அமர்ந்திருந்தான்.

வெளி ஏறிய ரசவாதி விரைவாக நடந்து வேறு நாடு அடைந்தான். தருமதத்தன் மூன்று நாட்கள் வரையில், அறையிலேயே அசையாமல் அமர்ந்திருந்தான். நான்காம் நாள் பகல் வாதியின் வரவை நோக்கினன். மோசம் செய்து சென்றவன் மீண்டும் வருவானே? பகல் முப்பது கடிகையும் கழிந்தது. தத்தன் எழுந்து தள்ளாடித் தள்ளாடிக் காளி ஆலயம் நோக்கி நடந்தான். கோயிலை அடைந்து சுற்றிச் சுற்றிப்பார்த்துக் கூப்பிட்டான். பதில் இல்லை. அப்பொழுதுதான் அவனுக்குச் சற்று ஐயமும் திகிலும் உதித்தது. திரும்பி வீட்டிற்கு ஏகினன். நெருப்பின் மீது இருந்த மண் குகையை எடுத்துப் பார்த்தான். அதில் இரும்பு நிறைந்திருந்

தது. என்ன செய்வான் பாபம்! ஓ என்று கூக்குரல் இட்டான். மூசையைக் கீழே விட்டுத் தானும் திட்டென்று விழுந்தான். பின்பு எழுந்து பித்தம் கொண்டு எங்கும் அலேந்தான். சில நாட்களுக்குள் அவன் உயிர் நீங்கிற்று. ஆசையால் விளைந்த அவதியைப் பார்த்தீர்களா! அதிக ஆசை அதிக நஷ்டம் என்பது பொய்க்குமா!



## 30. ஜீவ ஆதார அணுக்கள்

நாம் உட்கொள்ளும் உணவைப்பற்றியும், அது ஜீரணம் ஆவதைப்பற்றியும் நான்காம் வகுப்பில் படித்தோம். இப்போது அவ்வுணவில் உள்ள சில பொருள்களைப்பற்றி வாசிப்போம். நாம் உட்கொள்ளும் ஆகாரங்களுள் சிலவற்றில், ஜீவனுக்கு ஆதாரமான அணுக்கள் விரவி உள்ளன. அவ்வணுக்களுக்கு ஆங்கிலத்தில் வைட்டமன்ஸ் என்று பெயர். வைட்டமன்ஸ் உள்ள பண்டங்களை உண்டால்தான் சரீரம் வளரும். கெட்டுப்போன சரீர பாகமும் சீர்பெறும். தேகம் பலவிதம் இயங்குவதற்கும் சக்தி ஏற்படும்.

நமது உடல் வளர்ச்சியை ஒரு வீடு கட்டுவதோடு ஒப்பிடலாம். எப்படி எனில், வீடு கட்ட சல்லி, கல், மரம், சுண்ணும்பு, ஓடு முதலியன வேண்டி இருக்கின்றன. அவை அனைத்தும் இருந்தாலும் வீடு அமைந்துவிடாது. அவைகளைக்கொண்டு

சுவர், கூரை, வாயில்படி, கதவு முதலியன அமைக்க ஆள் வேண்டும். அவர்களே கொல்லத்துக்காரன், தச்சன், ஒட்டன் முதலியவர்கள். அதைப்போல நமது உணவில் மாப்பதார்த்தம், கொழுப்புப்பதார்த்தம், உப்புப்பதார்த்தம் முதலியவை கலந்து இருந்தாலும், அவைகளே சரீர பாகங்களுக்குச் சென்று போஷிக்கமாட்டா. அக்காரியங்களை ஜீவாதார அணுக்களே செய்கின்றன. வீடுகட்டுகிறவர்களைக் கொல்லத்துக்காரன், தச்சன், ஒட்டன் எனப் பல பெயர்கள் இட்டுக்கூறுவதுபோல ஜீவாதார அணுக்களும் பிரிக்கப்பட்டிருக்கின்றன. அவை A வைட்டமன், B வைட்டமன், C வைட்டமன், D வைட்டமன், E வைட்டமன் என்பனவாம்.

இவற்றுள் A வைட்டமன் கண், சுவாசப்பை, வயிறு, குடல்கள், முதலியவற்றைப்போஷிக்கும். B வைட்டமன் மூளை, நரம்பு, தசை, ஹிருதயம், வயிறு, குடர்கள் முதலியவற்றை வளர்க்கும். C வைட்டமன் ரத்தத்தை விருத்திசெய்கிறது. D வைட்டமன் பல், எலும்பு முதலியவற்றைப் பலப்படுத்துகிறது. E வைட்டமன் இன விருத்திக்கு ஆதாரமானது. மேலே கூறிய வைட்டமன் ஒவ்வொன்றும், எந்த எந்தப் பொருளில் இருக்கின்றது என்பதை இனிக் கூறுவோம்.

A வைட்டமன் :—வெண்ணெய், பால், கீரை வகை, காட்லீவர் ஆயில் (மீன் எண்ணெய்) முதலியவற்றில்உண்டு. மெஷினில் மசிந்த அரிசியிலும்

கடைகளில் விற்கும் மரிக்கின்மா (கோதுமை மா அல்லது வெள்ளைமா) விலும் இல்லை.

B வைட்டமன் :—சீமைத்தக்காளி, முள்ளங்கிக் கீரை, கோதுமை, சோளம், கம்பு, கேழ்வரகு, பருப்பு, எண்ணெய்வித்துக்கள் வெங்காயம், பால் முதலியவற்றில் இருக்கிறது. மெஷினில் மசிந்த அரிசி மரிக்கின்மா, வெண்ணெய், பழையபருப்பு, டீ, காபி, தேன் முதலியவற்றில் கிடையாது.

C வைட்டமன் :—கோஸ்முட்டை (முட்டை கோஸ்) எலுமிச்சம்பழம், ஆரஞ்சுபழம், தக்காளிப் பழம், உருளைக்கிழங்கு, முளை கட்டிய தானியங்கள் முதலியவற்றில் உண்டு. சத்து இல்லாத பருப்பு. புழுத்த பருப்பு முதலியவற்றில் இருக்காது.

D வைட்டமன்:—பால், வெண்ணெய், மோர் ஆகியவற்றில் இருக்கிறது.

E வைட்டமனைப்பற்றிய விஷயங்களை மேல் வகுப்பில் படிப்போம். நாம் உட்கொள்ளும் ஆகாரத்தில் இவ்விதமான பதார்த்தங்கள் கலந்திருக்கவேண்டியது அவசியம். ஆனாலும், எப்பொழுதும் ஒரேவிதமான உணவை உட்கொள்ளாமல், பலவகைப்பட்ட பண்டங்களையும் உட்கொள்வது நலம். அப்படிச் செய்வதால் தேகதிடமும் ஆரோக்கியமும் கெடுவதில்லை.



## 31. நிகண்டு

சிங்கத்தின் பெயர் :—அரி, வயப்போத்து, சீயம், அறுகு கேசரி, மிருகராஜன், வயமா, மடங்கல், கண்டீரவம், பஞ்சானனம்.

புலியின் பெயர் :—வல்லியம், வயமா, சித்திரகாயம், உழுவை, பாய்மா, வியாக்கிரம், தரக்கு, வேங்கை, குயவரி, புண்டரீகம், கொடுவரி.

யானையின் பெயர் :—தும்பி, மாதங்கம், தூங்கல், தோல், கறைஅடி, உம்பல், வாரணம், புழுக்கை, நாகம், நால்வாய், குஞ்சரம், அத்தி, வேழம், உவா, கரி, கயம், களிறு, கைம்மா.

பசுவின் பெயர் :—கூலம், கோ, குடம், சுரபி, ஆ, நிரை, தேனு, பெற்றம்.

எருதின் பெயர் :—பாறல், சே, பெற்றம், பூணி, பாண்டில், கொட்டியம், இருல், ஏறு, மூரி, புல்லம்.

ஆட்டின் பெயர் :—அருணம், செம்மறி, மோத்தை, அசம், உதள், உடு, கொச்சை, துருவை, ஏழகம், பள்ளை, வருடை, மேடம், மை, மறி, கொறி, தகர்.

பன்றியின் பெயர் :—கேழல், குரோடம், கிரி, கிடி, கிருட்டி, ஏனம். மோழல், இருளி, வல்லுளி, களிறு, மைம்மா, வராகம், கோலம், சூகரம், எறுழி.

நரியின் பெயர் :—ஓரி, கோமாயு, ஊளன், ஒண்டன், இகலன், சம்பு, சம்புகம், பூரிமாயன்.

நாயின் பெயர் :—சூரன், முடுவல், பாசி, புரோகதி, சுனகன், குக்கல், கூரன், எகினன், அக்கன், ஞமலி, ஞாளி, சுணங்கன், சுவா.

பூனையின் பெயர் :—வெருகு, அலன், ஓதி, விலாளம், பூசை, மார்ச்சாலம், இல்புலி, பாக்கன், பூஞை.

மயிலின் பெயர் :—சிகி, ஞமலி, தோகை, சிகண்டி, மஞ்ஞை, ஒகரம், மயூரம், பிணிமுகம், கலாபி, நவிரம், பீலி, கேகயம்.

கிளியின் பெயர் :—சாரு, அரி, வன்னி, தத்தை, சுகம், கிள்ளை, கீரம், சுவாகதம், அவந்திகை.

காகத்தின் பெயர் :—கரடம், வாயசம், அரிட்டம், கரும் பிள்ளை, கொடி.

வண்டின் பெயர் :—அரி, அளி, ஞிமிறு, மந்தி, அறுபதம், சிலீமுகம், சஞ்சரிகம், சரகம், சுரும்பு, கீடம், பிரமரம், மா, கீதர், பிருங்கம், பிரசம், புள், புண்டரீகம், தும்பி, மதுபம்.

குரங்கின் பெயர் :—வலிமுகம், கடுவன், வானரம், அரி, மந்தி, பிலவங்கம், கோகிலம், கோடரம், யூகம், மர்க்கடம், நாகம், கவி.

மூங்கிலின் பெயர் :—காம்பு, பாதிரி, முடங்கல், கழை, பணை, விண்டு, நேமி, தூம்பு, வேய், தட்டை, வேணு, ஆம்பல், கீசகம், வேரல், அரி, அமை, வேழம், வரை, வெதிர்.

வாழையின் பெயர் :—கதலி, அரம்பை.

கரும்பின் பெயர் :—வேழம், கன்னல், இக்கு, கழை.

தென்னையின் பெயர் :—தாழை, தெங்கு, நாளிகேரம், இலாங்கலி.



## 32. அன்னை

ஐயிரண்டு திங்களாய் அங்கம் எலாம் நொந்து பெற்றுப்
பையல் என்றபோதே பரிந்தெடுத்து—செய்யஇரு

கைப் புறத்தில் ஏந்திக் கனிந்துஅமுது தந்தாளை
எப்பிறப்பில் காண்பேன் இனி. (1)

வட்டிலிலும் தொட்டிலிலும் மார்மேலும் தோள்மேலும்
கட்டிலிலும் வைத்துஎன்னைக் காதலித்து—முட்டச்
சிறகில் இட்டுக் காப்பாற்றிச் சீராட்டும் தாய்க்கோ
விறகில் இட்டுத் தீமூட்டு வேன். (2)

முந்தித் தவங்கிடந்து முந்நூறு நாள்சுமந்து
அந்திபக லாச்சிவனை ஆதரித்துத்—தொந்தி
சரியச் சுமந்துபெற்ற தாயார் தமக்கோ
எரியத் தழல்மூட்டு வேன். (3)

(பட்டினத்தார்)



## மன்னன் வாழ்த்து

(கிளிக்கண்ணி)

1. அந்தமிகும் துரையே ஐந்தாம் ஜார்ஜு துரையே
   அநுதினம் உன்றன் புகழ் துரையே
   இந்தியருக் குள்ளே திகழ் (அந்த)
2. மன்னுதி மன்னர்கட்கும் மகிதல மாந்தர்கட்கும்
   பன்னரும் உபகாரியே துரையே
   பகாரும் குணநிதியே (அந்த)
3. கண்ணான கண்மணியே கருதும் சிகாமணியே
   வண்கருணை குணியே துரையே
   பண்இசை நீ அணியே (அந்த)
4. மனைவி மக்களுடனே மல்கும் செல்வத்துடனே
   ஆனந்தமாய் வாழ்ந்திடுவாய் துரையே
   ஆண்டவன் அருள்பெறுவாய் (அந்த)



# செய்யுள்

## 1. கல்வி

1. கல்லாத மூடரைக் காணவும் ஆகாது
கல்லாத மூடர்சொல் கேட்கக் கடன் அன்று
கல்லாத மூடர்க்குக் கல்லாதார் நல்லவர்ஆம்
கல்லாத மூடர் கருத்துஅறி யாரே.

(திருமூலர் திருமந்திரம்)

2. கற்றதுகைம் மண்ணளவு கல்லா துலகு அளவுஎன்று
உற்ற கலைமடந்தை ஓதுகிறாள் —மெத்த
வெறும்பந் தயம்கூற வேண்டாம் ; புலவீர் !
எறும்பும் தன்கையால் எண் சாண்.

(அவ்வையார்)

## 2. பழக்கம்

3. சித்திரமும் கைப்பழக்கம்; செந்தமிழும் 'நாப்பழக்கம்;
வைத்ததொரு கல்வி மனப்பழக்கம் ;—நித்தம்
நடையும் நடைப் பழக்கம் ; நட்பும் தயையும்
கொடையும் பிறவிக் குணம்.

(அவ்வையார்)

## 3. தெய்வம்

4. ஆதுலர்க்கு அன்னம் கொடுத்தவர்களே தெய்வம் ;
அன்பான மாணுக்கருக்கு
அரியகுரு வேதெய்வம் ; அஞ்சினோர்க்கு ஆபத்து
அகற்றினோனே தெய்வமாம் ;

காதல்உறு கற்புஉடைய மங்கையர் தமக்கு எல்லாம்
கணவனே மிக்க தெய்வம்
காசினியில் மன்னுயிர் தமக்குஎலாம் குடிமரபு
காக்கும் மன்னவர் தெய்வமாம்
ஓதரிய பிள்ளைகட்கு அன்னைதந்தையர் தெய்வம்;
உயர்ஜாதி மாந்தர் யார்க்கும்
உறவின் முறையார் தெய்வம்; விசுவாசம் உள்ளபேர்க்கு
உற்றசிவ பக்தர் தெய்வம்;
மாதயையினால் சூத்திரர்க்கு மறையோர் தெய்வம்;
வானவர்க்குத் தெய்வம் நீ
மயில்ஏறி விளையாடும் குகனேபுல் வயல்நீடும்
மலைமேவும் குமரேசனே. (குருபாததாசர்)



## 4. வாக்குண்டாம்

5. வாக்கு உண்டாம்; நல்த மனம் உண்டாம்; மாமலராள்
நோக்கு உண்டாம்; மேனி நுடங்காது;—பூக்கொண்டு
துப்புஆர் திருமேனித் தும்பிக்கையான் பாதம்
தப்பாமல் சார்வார் தமக்கு (1)

6. நல்லார் ஒருவர்க்குச் செய்த உபகாரம்
கல்மேல் எழுத்துப்போல் காணுமே—அல்லாத
ஈரம் இல்லா நெஞ்சத்தார்க்கு ஈந்த உபகாரம்
நீர்மேல் எழுத்திற்கு நேர். (2)

7. நீர்அளவே ஆகுமாம் நீர்ஆம்பல் தான்கற்ற
நூல்அளவே ஆகுமாம் நுண்அறிவு—மேலைத்
தவத்துஅளவே ஆகுமாம் தான்பெற்ற செல்வம்
குலத்து அளவே ஆகும் குணம். (3)

8. நல்லாரைக் காண்பதுவும் நன்றே நலம்மிக்க
நல்லார் சொல் கேட்பதுவும் நன்றே—நல்லார்
குணங்கள் உரைப்பதுவும் நன்றே அவரோடு
இணங்கி இருப்பதுவும் நன்று. (4)

9. தீயாரைக் காண்பதுவும்தீதே திருஅற்ற
தீயார் சொல் கேட்பதுவும் தீதே—தீயார்
குணங்கள் உரைப்பதுவும் தீதே அவரோடு
இணங்கி இருப்பதுவும் தீது. (5)

10. கவைஆகிக் கொம்புஆகிக் காட்டுஅகத்தே நிற்கும்
அவைஅல்ல நல்லமரங்கள்—சபைநடுவே
நீட்டுஓலை வாசியா நின்றான் குறிப்புஅறிய
மாட்டா தவன்நல் மரம். (6)

11. கான மயிலாடக் கண்டுஇருந்த வான்கோழி
தானும் அதுவாகப் பாவித்துத்—தானும்தன்
பொல்லாச் சிறகை விரித்து ஆடினால் போலுமே
கல்லாதான் கற்ற கவி. (7)

12 .சீரியர் கெட்டாலும் சீரியரே சீரியர் மற்று
அல்லாதார் கெட்டால் அங்கு என்ஆவர்—சீரிய
பொன்னின் குடம்உடைந்தால் பொன்ஆகும் என்ஆகும்
மண்ணின் குடம் உடைந்தக் கால். (8)

13. நல்தா மரைக்கயத்தில் நல்அன்னம் சேர்ந்தாற்போல்
கற்றாரைக் கற்றாரே காமுறுவர்—கற்புஇலா
மூர்க்கரை மூர்க்கர் முகப்பர் முதுகாட்டில்
காக்கை உகக்கும் பிணம். (9)

14. மன்னனும் மாசுஅறக் கற்றோனும் சீர்தூக்கின் [குத்
மன்னனின் கற்றோன் சிறப்புஉடையன்—மன்னனுக்

தன்தேசம் அல்லால் சிறப்புஇல்லை கற்றோற்குச்
சென்றஇடம் எல்லாம் சிறப்பு. (10)

15. சாம்தனையும் தீயனவே செய்திடினும் தாம்அவரை
ஆம்தனையும் காப்பர் அறிவுஉடையோர்—மாந்தர்
குறைக்கும் தனையும் குளிர்நிழலைத் தந்து
மறைக்குமாம் கண்டீர் மரம். (11)

(அவ்வையார்)



## 5. நல்வழி.

16. பாலும் தெளிதேனும் பாகும் பருப்பும் இவை
நாலும் கலந்துஉனக்கு நான்தருவேன்—கோலம்செய்
துங்கக் கரிமுகத்துத் தூமணியே நீ எனக்குச்
சங்கத் தமிழ் மூன்றும் தா. (1)

17. சாதி இரண்டு ஒழிய வேறில்லை சாற்றுங்கால்
நீதி வழுவா நெறிமுறையின்—மேதினியில்
இட்டார் பெரியோர் இடாதார் இழிகுலத்தோர்
பட்டாங்கில் உள்ளபடி. (2)

18. ஆற்றுப் பெருக்குஅற்று அடிசுடுமந் நாளும்அவ்வாறு
ஊற்றுப் பெருக்கால் உலகு ஊட்டும்—ஏற்றவர்க்கு
நல்ல குடிப் பிறந்தார் நல்கூர்ந்தார் ஆனாலும்
இல்லை என மாட்டார் இசைந்து. (3)

19. ஆண்டு ஆண்டுதோறும் அழுது புரண்டாலும்
மாண்டார் வருவரோ மாநிலத்தீர்—வேண்டா
நமக்கும் அதுவழியே நாம்போம் அளவும்
எமக்கு என்என்று இட்டுஉண்டு இரும். (4)

20. ஒருநாள் உணவை ஒழிஎன்றால் ஒழியாய்
இருநாளுக்கு ஏல்என்றால் ஏலாய்—ஒருநாளும்
என்னோ அறியாய் இடும்பைகூர் என்வயிறே
உன்னோடு வாழ்தல் அரிது. (5)

21. சேவித்தும் சென்று இரந்தும் தெள்நீர்க்கடல் கடந்தும்
பாவித்தும் பாராண்டும் பாட்டு இசைத்தும்—போவிப்
பாழின் உடம்பை வயிற்றின் கொடுமையால் [பம்
நாழி அரிசிக்கே நாம். (6)

22. பாடுபட்டுத் தேடிப் பணத்தைப் புதைத்துவைத்துக்
கேடுகெட்ட மானிடரே கேளுங்கள்—கூடுவிட்டுஇங்கு
ஆவிதான் போயினபின்பு ஆரே அனுபவிப்பார்
பாவிகாள் அந்தப் பணம். (7)

23. வேதாளம் சேருமே வெள்ளருக்குப் பூக்குமே
பாதாள மூலி படருமே—மூதேவி
சென்று இருந்து வாழ்வளே சேடன் குடிபுகுமே
மன்று ஓரம் சொன்னார் மனை. (8)

24. ஆன முதலில் அதிகம் செலவுஆனால்
மானம் அழிந்து மதிகெட்டுப்—போனதிசை
எல்லார்க்கும் கள்ளனாய் எழ்பிறப்பும் தீயனாய்
நல்லார்க்கும் பொல்லன்ஆம் நாடு. (9)

25. மானம் குலம் கல்வி வண்மை அறிவுஉடைமை
தானம் தவம்உயர்ச்சி தாளாண்மை—தேனின்
கசிவந்த சொல்லியர்மேல் காமுறுதல் பத்தும்
பசிவந் திடப்பறந்து போம். (10)

26. ஆறுஇடும் மேடும் மடுவும்போல் ஆம்செல்வம்
மாறிடும் ஏறிடும் மாநிலத்தீர்—சோறுஇடும்
தண்ணீரும் வாரும் தருமமே சார்பாக
உள்நீர்மை வீறும் உயர்ந்து (11)

(அவ்வையார்)



## 6. நீதி வெண்பா

27. கண்இரண்டே யாவர்க்கும் கற்றோர்க்கு மூன்றுவிழி
எண்ணும் விழி ஏழாகும் ஈவோர்க்கு—நண்ணும்
அநந்தம் தவத்தால் அருள்ஞானம் பெற்றோர்க்கு
அநந்தம் விழி என்று அறி. (1)

28. கொம்பு உளதற்கு ஐந்து குதிரைக்குப் பத்துமுழம்
வெம்புகரிக்கு ஆயிரம்தான் வேண்டுமே—வம்புசெறி
தீங்கினர்தம் கண்ணில் தெரியாத தூரத்து
நீங்குவதே நல்ல நெறி. (2)

29. வாக்குநயத் தால்அன்றிக் கற்றவரை மற்றவரை
ஆக்கைநயத் தால்அறியல் ஆகாதே—காக்கையொடு
நீலச் சிறுகுயிலை நீடுஇசையால் அன்றியே
கோலத்து அறிவருமோ கூறு. (3)

30. உத்தமர்தாம் ஈயும்இடத்து ஓங்குபனை போல்வரே
மத்திமர்தாம் தெங்குதனை மானுவரே—முத்துஅலரும்
ஆம்கமுகு போல்வார் அதமர் அவர்களே
தேம்கதலியும் போல்வர் தேர்ந்து. (4)



# அரும்பத உரை அகராதி

அகத்தே - உள்ளே
அகல - நீங்க
அகற்றினோன் - நீக்கினவன்
அகற்றும் - நீக்கும்
அகி - பாம்பு
அங்கம் - உறுப்பு
அங்கதம் - பாம்பு
அசரீரி - உடல் இல்லாதது
அசனம் - உணவு
அண்மி - நெருங்கி
அந்தி - மாலை
அந்தோ - ஐயோ
அநந்தம் - அளவில்லாத
அம்மை - அழகு
அயர்ந்தேன் - சோர்ந்தேன்
அயல் - பக்கம், அன்னி
அரண் - காவல்
அரவம் - பாம்பு
அரயன் - அரசன் [மால்.
அரி - வண்டு, சிங்கம், திரு
அருகில் - பக்கத்தில்
அல் - இரவு
அலர் - பூ
அலவன் - நண்டு
அலறினேன் - கத்தினேன்
அவனிபர் - அரசர்
அவஸ்தை - கஷ்டம்
அறச்சாலை - தரும சத்திரம்
அறி - தெரிந்துகொள்
அனவரதம் - எப்பொழுதும்
அனுமதி - உத்தரவு
அனைய - போன்ற

அஷ்டாக்ஷரம் - எட்டெழுத்து
ஆக்கை - தேகம்
ஆகண்டலன் - தேவேந்திரன்
ஆசனம் - பீடம் (நாற்காலி
முதலியன)
ஆசி - வாழ்த்து
ஆசீர்வதித்து வாழ்த்துக் கூறி
ஆண்டு - ஆட்சி செய்து, வரு
ஷம்
ஆதரவு - உதவி
ஆதாரம் - ஆதரவு
ஆதியை - கடவுளை [கள்)
ஆதுலர் - தரித்திரர் (ஏழை
ஆம்பல் - அல்லி
ஆய் - தாய்
ஆர்த்தனன் - கூக்குரலிட்
டான்
ஆலம் - விஷம்
ஆவி - உயிர்
ஆழி - மோதிரம்
ஆற்ற - குறைக்க
ஆஜர் - தயார்
இகல் - பகை
இசை - ஓசை, புகழ்
இசைக்கின்றனர் - சொல்லு
கிறார்கள்
இசைத்தல் - சொல்லல்
இசைந்து - சம்மதித்து
இட்டு - வைத்து
இடும்பை - துன்பம்
இணங்கி - இசைந்து
இயங்கும் - அசையும்

இயம்பினர் - கூறினார்கள்
இயல் - லக்ஷணம்
இயலாது - முடியாது
இரங்கினன் - வருந்தினன்
இரந்து - யாசித்து
இரு - பெரிய
இரை - உணவு
இழிகுலம் - தாழ்ந்தஜாதி
இறுத்தால் - செலுத்தினல்
இறைஞ்சி - வணங்கி
இறையும் - கொஞ்சமும்
இறைவன் - அரசன், கடவுள்
இன்றி - இல்லாமல்
இன்னல் - துன்பம்
ஈடு - சமம்
ஈந்த - கொடுத்த
ஈந்தால் - கொடுத்தால்
ஈயும் - கொடுக்கும்
ஈரம் - கருணை, அன்பு
ஈவோர்க்கு - கொடுக்கிறவர்களுக்கு
ஈனம் - இழிவு
ஈனுகின்ற - பெறுகின்ற
உகக்கும் - விரும்பும்
உண்டு - சாப்பிட்டு, இருக்கிறது
உணர்வு - அறிவு
உந்தி - வயிறு, செலுத்தி
உபாயம் - தந்திரம்
உய்வேன் - பிழைப்பேன்
உயர்ச்சி - பெருமை, மேன்மை
உரகம் - பாம்பு
உலறினேன் - வருந்தினேன்
உவந்து - சந்தோஷித்து
உவப்பு - மகிழ்ச்சி
உள் நீர்மை - மனத்தின் தன்மை
உறுகண் - துன்பம்
உறை - வசி, வாழ்
உறைந்தான் - வசித்தான்
உறையுள் - வசிக்கும் இடம்
உறைவதாக - வசிப்பதாக
ஊட்டும் - உண்பிக்கும்
ஊடாடி - சஞ்சரித்து
ஊதியம் - பயன்
ஊறும்-நனையும் (பூமி ஊறும்)
ஊழ் - முறை
எய்தும் - அடையும்
எய்ய - விட
எயிறு - பல்
எள்ளுதல் - இகழ்தல்
என்பு - எலும்பு
ஏ - அம்பு
ஏகாந்தம்-தனியாய் இருப்பது
ஏகினர் - சென்றார்கள்
ஏந்தல் - அரசன்
ஏல் - ஏற்றுக்கொள்
ஏவல் - கட்டளை
ஏற்றம் - உயர்வு
ஏற்றவர்க்கு - யாசித்தவர்களுக்கு
ஏற்று - கொண்டு
ஏறிடும் - அதிகமாகும்
ஐயம் - பிச்சை, சந்தேகம்
ஒண்ணு - தகாத
ஒப்பு - சமம், சம்மதம்
ஒருப்பட்டு - சம்மதித்து
ஒல்லே - விரைவாக
ஒழி - நீக்கு
ஓர்க்கோலை - கடலில் கிடைக்கும் ஒருவகை வாசனைப் பொருள்
ஓரம் - ஒருதலைப்பக்ஷம்
ஓரும் - யோசிக்கும்

கசியும் - ஒழுகும்
கட்டு உரை - உண்மையான சொல்
கடன் - விதி
கடி - அழகு, வாசனை
கடிகை - நாழிகை
கண்ணி - சுருக்கிட்ட கயிறு (முடி)
கதி - பிறப்பு
கந்தம் - வாசனை
கபடன் - வஞ்சகன்
கமண்டலம் - கெண்டிகை (சிறிய பாத்திரம்)
கமலம் - தாமரை
கயம் - குளம்
கரந்து - மறைந்து
கரி - யானை
கருத்து - எண்ணம்
கலைமாது - சரஸ்வதி, காளி
கவலை - கஷ்டம்
கவனம் - எண்ணம்
கவை - கிளை
கழறிஞன் - உறுத்திச்சொன்ஞன்
களை - இளைப்பு
கனப்பட்டது - அதிகப்பட்டது
கனிந்து - களித்து
கா - காவடி
காகுத்தன் - ராமன்
காசு - குற்றம்
காட்சி - தோற்றம்
காண்டீபன் - அருச்சுனன்
காதல் - அன்பு
காதலித்து - விரும்பி
காமுறுவர் - விரும்புவர்
காரிகை - அழகு, பெண்
கால் - காற்று
காவணம் - பந்தல்
காளம் - விஷம்
கானம் - காடு
குகன் - முருகன்
குகை - தட்டார் பொன் முதலியன உருக்கும் மண் பாத்திரம்.
குதூகலம் - மகிழ்ச்சி
குரவர் - பெரியோர்
குலம் - ஜாதி
குலாலன் - குயவன்
குழூஉக்குறி - கூட்டத்தின் அடையாளம்
(குறைக்கும்) தனையும்- (குறைக்கும்) அளவும்
கூடு - சேர்
கூப்பி - சேர்த்து
கூர் - மிகுதி
கையன் - வஞ்சகன்
கொட்டி - அடித்து, தட்டி
கொடை - கொடுத்தல்
கொள்கை - எண்ணம்
கொன் உந்திய - அச்சம் பொருந்திய
கொற்றம் - வலிமை
கோ - தலைவன், அரசன்
கோது - குற்றம்
கோமான் -தலைவன், மன்னன்
கோலம் - அழகு
சங்கம் - முடிவு, கூட்டம்
சார்பாக - பக்ஷமாக
சார்வார் - சேர்வார்
சாற்றுங்கால் - சொல்லும்பொழுது.
சித்தம் - மனம்
சித்தி - விருத்தி

சிந்தித்தனன் - நினைத்தனன்
சில்லோர் - சிலர் [த்து
சிலிர்த்து - மயிர்க்கூச்சு எடு
சிறகில் - பக்கத்தில்
சிறப்பு - மேன்மை
சிறை - காவல்
சீர்தூக்கின் - ஆராய்ந்தால்
சீரிது - நல்லது
சீரியர் - நல்லோர்
சீறி - கோபித்து
சிஷர் - மாணவர்
சுடர் - ஒளி
சுந்தரம் - அழகு
சுயோதனன் - துரியோதனன்
சுரம் - பாலை வனம்
சுழற்றி - சுற்றி
சூழ்ச்சி - தந்திரம்
சூளுரை - சபதம்
செந்திரு - லக்ஷ்மி
செம்மல் - அரசன்
செய்தி - விஷயம்
செருக்கு - அகங்காரம்
செருவினை - போர்த்தொழில்
செல்வம் - ஐசுவரியம்
செவிலியர் - வளர்ப்புத்தாயர்
செறி - நெருங்கு
சேடன் - பாம்பு
சேடாக - பெரிதாக
சேமம் - காவல்
சேயிழை - பெண்
சேவித்து - வணங்கி
ஞானம் - மிகுந்த அறிவு
தகாது - பொருந்தாது
தசனம் - பல்
தண் - குளிர்ச்சி
தணிய - குறைய
தந்திரம் - உபாயம் [வியும்
தம்பதிகள் - புருஷனும் மனை
தயங்குகிறது - விளங்குகிறது
தயை - அன்பு
தரணிபர் - அரசர்
தரு - மரம்
தவிப்போம் - வருந்துவோம்
தவிர்ந்தது - நீங்கியது
தழுவுதல் - சேர்த்தல்
தா - கொடு
தாதை - தந்தை
தாம்பு - கயிறு
தாமதம் - நிதானம்
தாளாண்மை - முயற்சி
தாறுமாறு - குழப்பம்
திகில் - பயம்
திங்கள் - சந்திரன்
திணறி - மூச்சுத்தடுமாறி
திரவம் - நீர்த்தன்மை
திரவியம் - பொருள்
திரு - செல்வம், அழகு
திறமை - வல்லமை
தீட்டி - எழுதி
தீமை - கெடுதி
தீவிரம் - அவசரம் [கை
தீவினை - பாவம் (கெட்டசெய்
துங்கம் - உயர்வு
துடி - உடுக்கை வாத்தியம்
துப்பு - பவளம்
துரை - அரசன் (மேலானவன்)
துவக்கினல் - ஆரம்பித்தால்
துறவு - நீக்கம்
தூமணி - சிறந்தரத்தினம்
தூமம் - புகை
தையல் - பெண்
தோந்தி - வயிறு

தொண்டர் அடியவர்
நங்கை - பெண்
நஞ்சு - விஷம்
நட்பு - நேசம்
நண்ணி - சேர்ந்து
நண்ணும் - பொருந்தும்
நணுகினர் - கிட்டினர்
நந்தவனம் - பூந்தோட்டம்
நயத்தல் - விரும்பல்
நரலை - கடல்
நல்கினல் - கொடுத்தால்
நல்கூர்ந்தார் - தரித்திரப்
பட்டார்
நல்வினை - புண்ணியம்
நவிலுங்கள் - சொல்லுங்கள்
நவின்றான் - சொன்னான்
நனி - மிக
நாசப்படுத்தி - அழித்து
நாடு - பார் (நோக்கு)
நாணம் - வெட்கம்
நாமம் - பெயர்
நாமதேயம் - பெயர்
நிகழ்ந்தன - நடந்தன
நிதி - செல்வம்
நிமித்தம்-பொருட்டு (சகுனம்)
நுகரா - உண்ணு
நுடங்காது - இளைக்காது
நுண் - சிறிய
நெறி - நீதி
நோ - துன்பம்
நோக்கு - பார்
பகம் - கொக்கு
பகன் - கொக்கு
பட்டாங்கு - சாஸ்திரம்
படிகம் - வெள்ளை
பண்டை - பழைமை

பண்பு - குணம் [வேலை
பணி - பாம்பு, ஆபரணம்,
பதி - நகரம், தலைவன்
பதுமநாபன் - விஷ்ணு
பரம் - மேல்
பரிகாரம் - நிவர்த்தி
பரிந்து - மகிழ்ந்து, வருந்தி
பரிமா - குதிரை
பரிவு - அன்பு, துக்கம்
பருவம் - வயது, காலம்,
பருவரல் - துன்பம்
பழுது - கேடு
பற்குனன் - அருச்சுனன்
பற்றி - பிடித்து
பறிப்பான் - பிடுங்குவான்
பன்னகம் - பாம்பு
பனவர் - வேதியர்
பாங்கு அழகு
பாஞ்சாலி - பாஞ்சாலன்மகள்
பாதகம் - பாவம்
பாதாளமூலி-ஒருவகைக்கொடி
பாந்தள் - பாம்பு
பார்த்தன் - அருச்சுனன்
பால் - பகுதி, இடம்
பாலிக்கும் - கொடுக்கும்
பாவித்து - நினைத்து
பானம் - குடிப்பது
பிணி - நோய்
பிதற்றுவார்கள் - சொல்லு
வார்கள் (தவருகச் சொல்
பிரகாசம் - ஒளி [லுதல்)
பிரவாகம் - வெள்ளம்
பிரார்த்தனை - வேண்டுகோள்
பிருதை - குந்தி
பீடம் - ஆசனம்
பீடு - பெருமை, வலிமை

புத்தி - அறிவு
புரம் - மதில்
புல்லியன் - கீழ்மகன்
புலப்பட - தெரிய
புலவர் - அறிவு உடையவர்
புவனம் - உலகம்
புறம் - வெளி
பூசை - பூனை
பூவை - நாகணவாய்ப்புள் (மைனுபறவை)
பூஷணம் - ஆபரணம்
பெருக்கு - வெள்ளம்
பைசல் - முடிவு, தீர்ப்பு
பைய - மெதுவாக
பொங்கிற்று - அதிகப்பட்டது
பொத்தி - மூடி
போந்து - வந்து, சென்று
போர் - குவியல்
போவிப்போம் - போகச்செய்வோம்
போஷிக்க - வளர்க்க
மட்டு - அளவு
மடம் - அறியாமை
மண்டூகம் - தவளை
மணம் - வாசனை, கலியாணம்
மதி - அறிவு, சந்திரன்
மரபினர் - ஜாதியார்
மரபு - வழக்கம்
மலராள் - லக்ஷ்மி
மறையோர் - வேதியர்
மன்றம் - சபை
மன்றல் - கலியாணம்
மன்று - சபை
மனை - வீடு
மா - பெரிய, பெருமை
மாசு - குற்றம்
மாசுணம் - பாம்பு
மாட்டு - இடத்தில்
மாண்டார் - செத்தவர்கள்
மாரி - மழை
மால் - விஷ்ணு
மாறிடும் - வேறுபடும்
மாறு - பேதம்
மாறுபாடு - வேற்றுமை
மானம் - பெருமை
மானுவர் - போலாவார்
மிசை-மேலே
மீண்டனர் - திரும்பினர்
மூகப்பர் - விரும்புவர்
முகூர்த்தம் - வேளை
முட்டி - பிச்சை
முதுகாடு - சுடுகாடு
முரிந்து - ஒடிந்து
முருக்கும் - அழிக்கும்
முழங்கும் - ஒலிக்கும்
முனிவரோ -கோபிப்பார்களா
முனிவு - கோபம்
மூசி - குகை
மூசை - மூசி
மூர்க்கர் - தீயவர்
மேனி - தேகம்
மோனம் - மௌனம் (பேசாமல் இருப்பது)
லக்கு - குறி
வட்டில் - மடி
வடி - கூர்மை
வண்மை - ஈகை
வம்ஸம் - குலம்
வம்பு - வஞ்சனை
வயிரம் - கோபம்
வரலாறு - சரித்திரம்
வரி - கோடு

வழுவா - தவறாத
வறுமை - தரித்திரம்
வாக்கு - சொல்
வாகீசர் - நாவுக்கரசர்
வாச்சியம் - வாத்தியம்
வார்ந்தது - ஒழுகியது
வாரி - சமுத்திரம்
விசுவாசம் - அன்பு
விஞ்சையர் - கந்தருவர்
விண் - ஆகாயம்
விதி - ஒழுங்கு, முறை
விப்பிரர் - அந்தணர்
விமலன் - கடவுள் [படி
வியக்குமாறு - அதிசயிக்கும்
வியப்பு - ஆச்சரியம்
வியன் - பெரிய
வியாளம் - பாம்பு
விரவி - கலந்து
விருப்பம் - இஷ்டம்
விருத்தாப்பியம் - கிழத்தன்
விவேகம் - அறிவு [மை
விளித்து - கூப்பிட்டு
விஜயன் - அருச்சுனன்
வீழ்ச்சி - விழுதல்
வீறும் - அதிகமாகும்
வெகுளி - கோபம்
வெப்பம் - சூடு
வெம்பு - மிகக் கோபம்
வெவ்வேல் - கொடிய வேலா
வெற்றி - ஜயம் [யுதம்
வேசற்று - துக்கப்பட்டு
வேத்திரம் - பிரம்பு
வேதாரணியம் - மறைக்காடு
வேதாளம் - பெரும்பேய்
வேனில் - கோடை
வைகுக - வசிக்க
ஸ்ரீநிவாசன் - திருமால்
ஜீவன் - உயிர்.








Kesari Printing Works, Madras.